

உ.

# ஸ்ரீ அருணந்திதேவநாயனுர்
# குருபூஜை வெளியீடு

## திருத்துறையூர்

சய — புரட்டாசி — பூரநாள்



குருபூசை வெளியீடு:

1953: விசய–புரட்டாசி–பூரம் — 73.
அரிகரதாரதம்மியம்
பரப்பிரமவிளக்கம்

1954: சய–புரட்டாசி–பூரம் — 86.
சிற்றம்பலநாடிகள்
கலித்துறை முதலியன

ஸ்ரீ முருகன் அச்சகம்,
கும்பகோணம்.

திருவாவடுதுறை ஆதீனவெளியீடு 86



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சீகாழிச் —

# சிற்றம்பலநாடிகள்

## கலித்துறை முதலியன

---

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து
இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகமூர்த்திகள்**
கட்டளையிட்டருளியபடி

அவ்வாதீன வித்துவான்
**த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையால்**
பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்துப் பதிப்பிக்கப்பெற்றன.

---



சய-புரட்டாசி-பூரநாள்
1954

# பொருளடக்கம்



இருபத்தொன்றுவது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்

உ
சிவமயம்

# முகவுரை

திருச்சிற்றம்பலம்

“ஒப்புனக் கில்லா ஒருவனே ! அடியேன்
உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே !
மெய்ப்பதம் அறியா வீறிலி யேற்கு
விழுமிய தளித்ததோர் அன்பே !
செப்புதற் கரிய செழுஞ்சுடர் மூர்த்தீ !
செல்வமே ! சிவபெரு மானே !
எய்ப்பிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.” —திருவாசகம்.

திருச்சிற்றம்பலம்

சிற்றம்பலநாடிகள் கலித்துறை, வெண்பா என்பன சிற்றம்பலநாடிகளது கலித்துறை, சிற்றம்பல நாடிகளது வெண்பா என விரியும். ஆறும் வேற்றுமைத் தொகை; செய்யுட் கிழமைப் பொருளுடையது. இனி, சிற்றம்பலநாடிகளைப் பற்றிய கலித்துறை, வெண்பா எனப்பொருள் கொள்ளுமிடத்து இரண்டனுருபும்பயனும் உடன் தொக்கதொகையாம். இப்பிரபந்தங்களில் சிற்றம்பலநாடி, சிற்றைக்கதிபதி, சிற்றம்பலநாடினர் சொற்றனர், சிற்றம்பலநாடியைக்கண்டபின்னே எனப்பலபடியாக இவ்வாசிரியர் பாராட்டப் படுகிறார்கள். கலித்துறையின்கண் உள்ள செய்யுட்கள் —54: வெண்பாக்கள்-65 உள்ளன. ‘ஞானாசிரியர் மூன்றுவெண்பாக்களையருளிச் சமாதியிலிறங்கினர்’ என்னும் வரலாறுண்மையால் ஏனைய பாடல்கள் யாவும் மாணவர்களே அருளினர் என்பது பெறப்படும். ‘சென்றறிய வேண்டாவே’ 3, ‘உற்றுணர்வுக்குள்ளே’-4, ‘தங்களை நாமின்பத் தடங்கடலின்’-5, என்னும் மூன்று வெண்பாக்

களையே சிற்றம்பலநாடிகள் அருளினர் என்பர் பெரியோர். 'ஆண்டகுரு சிற்றம்பலவா'–42 என்பது கண்ணப்பர் வாக்கு. எனவே, இந்த நான்கு வெண்பாக்களை நீக்க–61 ஆகிறது. தத்துவப்பிரகாசர், ஞானப்பிரகாசர் ஆகிய இருவரும் துதித்த செய்யுள் இதில் சேர்ந்திருத்தலும் கூடுமன்றோ! இனி, ஆசிரியரும் மாணவரும் ஒருசேர ஒரேகாலத்தில் சிவபரிபூரணமாக அங்குள்ள பெரியோரில் சிவபுரம்-தத்துவப்பிரகாசரோ? அன்றி, சிவபுரம்–ஞானப்பிரகாசரோ? இச்செய்யுட்களையெல்லாம் தொகுத்திருக்க வேண்டும். நிற்க, அச்சிட்ட சிற்றம்பலநாடிகள் சாத்திரக்கொத்தில் உள்ள கலித்துறைக் காப்பும், வெண்பாக்காப்பும் இவ்வாதீன ஏட்டுச்சுவடிகளில் இல்லை. அச்சுப்புத்தகத்தில் மட்டுமே உள்ளன. எனினும், 'காப்பு இருத்தல் நல்லதே' எனக்கருதி அச்சுப்புத்தகத்தில் உள்ள காப்பையே இப்பதிப்பிலே காப்பாக அமைத்துள்ளேன். இப்பதிப்பில் வரிசைப்படுத்திய நூல்கள் எல்லாம் ஏட்டுச்சுவடிகளிலிருந்தபடியே 1. சிற்றம்பலநாடிகள்–கலித்துறை–54 : 2. வெண்பா–65; 3. தாலாட்டு–63: 4. அநுபூதிவிளக்கம்–65: 5. வருகாலத்திரங்கல்–49; நிகழ்காலத்திரங்கல்–50 ; கழிகாலத்திரங்கல்–54; திருப்புன் முறுவல்–11 நிரலே உள்ளன. அச்சிட்ட பிரதியில் : 1. செல் காலத்திரங்கல், 2. நிகழ்காலத்திரங்கல், 3. வருகாலத்திரங்கல், 4. அநுபூதிவிளக்கம், 5. தாலாட்டு, 6. வெண்பா, 7. கட்டளைக் கலித்துறை, 8. துகளறுபோதம், 9. திருப்புன்முறுவல் என்னும் இவ்வரிசையிலே பதிக்கப்பட்டிருக்கிறமை காணலாம்.

இனி, துகளறுபோதம் என்னும் ஞானநூலை அருளியவர்கள் சிற்றம்பலநாடிகளே. அந்தஞானநூல் இவ்வாதீனத்துப் பெரியோர்களுள் ஒருவர் இயற்றியருளிய பொழிப்புரையுடன் 1952 நந்தன-ஐப்பசி-சுவாதியில் இவ்வாதீனத்து 58-வது வெளியீடாக வந்துள்ளது. ஆதீனத்து ஏட்டுச் சுவடிகளாகிய இத்தொகுப்பில் துகளறு போதம் மட்டும் இல்லை. ஆதலால், இத்தொகுப்பில் அது சேர்க்கப் பட்டிலது என்க. கலித்துறை, வெண்பா இவைகட்கு மட்டும் செய்யுள் முதற்குறிப்பகராதியும் சேர்த்திருக்கிறேன். ஏனையவற்றிற்குஅத்துணை அவசியமின்மையின் முதற்குறிப்புச் சேர்க்கவில்லை.

எளிய இனிய சிவாநுபவ நூல்கள் ஆகலின் இந்த நூல்களைக் கையாளும் மெய்யன்பர்கள் யாவரும் சிறிதளவேனும் சித்தாந்தநூற் பயிற்சியும், சிவபூசை, சிவத்தியானுதிகளும் கைவந்திருப்பார்க ளென்னும் உறுதியால் உரைவரையவில்லை. சைவமெய்யன்பர்கள் தாங்கள் நித்தியாநுட்டானம், சிவபூசை முதலியவைகளை முடித்துக் கொண்டு பலமுறை இந்த நூல்களை காப்புடைபெயரும் அளவில் படித்தல் வேண்டும். படித்தவைகளைச் சிந்திக்கவேண்டும். சிவா நுபவம் கைகூடும். எள்ளளவும் ஐயமில்லை.

செய்யுட்களெல்லாம் அன்பர்கள் படிக்கும் அளவில் சந்தி பிரித்தே அச்சிடப்பட்டுள்ளன. இலக்கணச் சுருக்கமேனும் கல்லா தார் தமிழ் நூல்களில் நுழைந்து எப்பொருளையறியவல்லாராவர் ? 'இன்னநூல் கேட்டபின் இன்னநூல் கேட்கத்தகும்' என்னும் இயைபும் அறியார் எதனைப்படித்து ? அறிவு தேடிக்கொள்ளுவார். அந்தோ! முறையாகத் தமிழ்ப்பயிற்சி பெற்றுச் சித்தாந்தநூல் களிலும், சிறந்த காப்பியங்களிலும் செல்வாருக்கு எளிதாகப் பொருள் விளங்குமே! ஊக்கமும், உழைப்பும், உறுதிப்பாடும் இல் லாமையே எளியதமிழ்நூல்களும் சிலரறிவுக்குப் பெரிய சுமையாகத் தோன்றுகின்றன. சந்திகூடப்பிரித்துப் படியாவிட்டால் அந்தப் படிப்பால் பயனென்? தமிழாசிரியர்களை அவமதித்துத்தமிழ்கல்லாத தனுற் பயன் தமிழ்நூல்களை எளிதாகப் படிக்கமுடியாமையே. அது போல, ஞானசிரியர்களை அவமதித்துவிட்டு ஞானநூல்களில்புக இச் சைப்படும் மெய்யன்பர்களுக்கும் கதியிதுவேயாம் என்பதுசொல்லா மலே அமையும். இதனைக் கீழ்வரும் பழம் பாடல் நன்குணர்த்துவது காண்க.

" முந்துநூல் உழைப்பு மின்றி முத்தர்பால் இணக்கு மின்றிச்
சுந்தர குரவன் பாதத் தொழும்புகள் சிறிது மின்றி
அந்தமில் ஞானம் வேண்டும் அவரெலாம் கொழுநற் கொன்று
சந்ததி வேண்டி நோற்கும் தன்மையோ டொக்கு மன்றே."

இனி, இந்நூல்களை அச்சிடுவதற்கு உதவியாக இருந்த ஏட்டுச் சுவடிகள் வருமாறு :

1. திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துச் சரசுவதிமால் பிரதி—3.

2. என்தந்தையார் ஸ்ரீ T. A. சபாபதி பிள்ளையவர்கள் வைத்திருந்த ஏட்டுச்சுவடி ( மிகப்பழையது ) 1. [இதனை அன்புடன் ஆதீன நூல்நிலயத்துக்கே உதவியவர்: தமிழ்நூற்பயிற்சி மிக்குடையவரும், சித்தாந்த நூற்புலமையுடையவரும் ஆகிய என் இளவல் சிரஞ்சீவி -T. S. இராசகோபாலபிள்ளை].

3. திருமயிலை-வித்துவான்-ஸ்ரீ சண்முகம் பிள்ளையவர்களால் பரிசோதித்து (கி-பி-1904ல்) அச்சிடப்பட்ட சீகாழிச் சிற்றம்பலநாடிகள் சாத்திரக்கொத்து அச்சுப்புத்தகம்-1.

[இதனை அன்புடன் உதவியவர்கள் பரம்பரையே வித்துவானும், சித்தாந்த சைவரத்நாகரமும், சைவசீலரும் ஆகிய காமக்கூர்-ஸ்ரீ முத்து-சு. மாணிக்கவாசக முதலியாரவர்கள்]

வழக்கம்போலவே இதனையும் உடனிருந்து ஆராய்தல், ஒப்பு நோக்குதல், புரூவ்திருத்துதல் முதலிய பேருதவிகளைச் செய்த வித்துவான்-சிரஞ்சீவி V. நடராசபிள்ளை, சிரஞ்சீவி T. S. இராசகோபாலபிள்ளை, M. திருநாவுக்கரசு முதலியோருக்கு ஸ்ரீ பஞ்சாக்கரபரமாசாரியர் திருவருளும், குருவருளும் முன்னின்று பாது காப்பதாகுக.

இவ்வாதீனத்து இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் ஒப்புயர்வற்ற வள்ளன்மையும், அநுக்கிரக சீலமும் வரவாப் பெருகிச் சைவத்தமிழ் உலகிற்கு அரிய சிறந்த சைவசாஸ்திரநூல்களையும், தமிழ்நூல்களையும் மிகவழங்கிவருவதைக்கண்ட மெய்யன்பர்கள் சிந்தித்து—வந்தித்து-வாழ்த்துவதையன்றி என்னசெய்யக்கடவர்? குருமரபு நீடூழி வாழ்க. குற்றம் பொறுத்தருள்க.

இங்ஙனம்,
சித்தாந்தசைவமணி—
த. ச மீனாட்சிசுந்தரம் பிள்ளை,
ஆதீனவித்துவான்.

திருவாவடுதுறை
22—9—54.

# சிற்றம்பலநாடிகள் வரலாறு.

---

சோழவளநாட்டிலே தேவாரத்திருப்பதிகம் பெற்ற திருத்தலங்களுள் சீகாழிப்பதியும் ஒன்று. அது பன்னிருதிருப்பெயர்ப் பழம்பதி எனச் சிறப்பித்துச் சொல்லப்படும். சைவ சமயாசாரியர் நால்வருள் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் திருவவதாரம் செய்ததலம் அதுவாம். அப்புண்ணியதலத்திலே **சிற்றம்பல நாடிகள்** என்னும் பெயருடைய பெரியார் ஒருவர் அவதரித்தனர். இவர்வேளாண்குடியினர், முன்னைத்தவவிசேடத்தால் பக்குவ முதிர்ந்து பதி பசு பாசமாகிய முப்பொருளுண்மையை ஆராய்ந்து தினைத்திருந்தார். ஸ்ரீ நடராச மூர்த்தியின் எடுத்தபொற்பாதத்திலே இடையறாத சிந்தனைமிக்குடையராயினார். இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதமுற்றுவிளங்கினார், 'குருவும் தாரமும் கொண்டவன் தவம்' என்பது தமிழகத்துப் பழமொழியன்றோ! ஆகலின், பொய்கண்டகன்ற மெய்கண்ட சந்தானத்தின் அருளுபதேசத்தொடர்பு இயல்பாக இவர்களுக்கு வாய்த்தது. பெற்ற **பெரும்பொருளைப்** (மகாவாக்கியம்) பெரிதும் போற்றிச் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகூடல் முதலியவற்றால் சிறந்து சிவாநுபூதிச் செல்வராய் அங்கே வீற்றிருந்தனர். இவர்களுடையஞானாசாரியர் **கங்கைமெய்கண்டார்** என்பவர்கள். '**கங்கைநகர் மெய்கண்டான்**' எனச் சிற்றம்பலநாடிகள் அநுபூதிவிளக்கம் கழிகாலத்திரங்கல்முதலியவற்றில் நன்கு குறிக்கப்பெறுவதனால் கங்கைகொண்ட சோழபுரத்திலே அவதரித்தவர்கள் இந்த ஞானாசாரியர் எனக் கருத இடமுண்டாகிறது. புறச்சந்தான குரவர் நால்வருள் ஸ்ரீ உமாபதிதேவநாயனாருடைய ஞானபுத்திரராகிய ஸ்ரீ அருணமச்சிவாயரிடத்துச் சித்தர் சிவப்பிரகாசர் சிவஞானோபதேசம் பெற்றனர். அவர்பால் அநுக்கிரகம் பெற்றவர்கள் ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகமூர்த்திகள். ஸ்ரீ அருணமச்சிவாயர்பால் சிவஞானோபதேசம் பெற்ற மற்றொருகிளை சீகாழி

யிலே வதிந்தருளியது. ஆகலின், இவர்கள் காழிக் கங்கை மெய்கண்டார் எனவும் பெயர் வழங்கப் பெற்றனர். இவர்கள ஞானபுத்திரரே நமது சிற்றம்பலநாடிகள்.

சிற்றம்பலநாடிகள்பால் அருளுபதேசம் பெற்ருர் மிகப்பலர். அவருட்சிறந்தார் அறுபத்துமூன்று மாணவர். அவருள்ளும் சிறந்தார் சிவபுரம்-தத்துவப்பிரகாசர், சிவபுரம் - ஞானப்பிர காசர், கண்ணப்பர் முதலாயினுர். இவர்கள் யாவரும், தமது ஞாஞசிரியருடைய திருவடிநீழல் விட்டகலாது குருபணிவிடை செய்து ஒரு திருக்கூட்டமாகச் சிவானுபூதிமான்களாகத் திகழ்ந்தனர். திருமயிலாடுதுறைஎன்னும் கௌரிமாயூரத்துக்கு அண்மையில் உள்ள சித்தர்காடு என்னும் இடத்தில் சிவா னந்த நிட்டையிலெழுந்தருளியிருந்து சிவபூசை, குருபூசை, மகேசுரபூசைகளையும் விதிப்படி செய்து வந்தனர். தம்மை யடுத்த பக்குவாகட்கு அநுக்கிரகமும் செய்தனர்.

இங்ஙனம் வீற்றிருக்குங்காலத்திலே வழக்கம்போல் ஒரு நாள் ஸ்ரீ சிற்றம்பலநாடிகள் அடியாாகளுடனிருந்து திருவமுது செய்தருளினர். அப்போது தவசிப் பிள்ளை பசுவினெய் எனக் கருதி அறியாமல் வேப்பெண்ணெயைப் பரிகலத்திலே பெய்து விட்டான். ஆசிரியர் முதலிய அனைவரும் அதனையுணர்ந் தும் ‘இறைவனிட்டபடிஇது’ எனக கிடைத்ததை உண்டரு ளினர். அவருட் கண்ணப்பர் மட்டும் கசப்பை நினைந்து அரு வருப்புடன் உண்ணுமலிருந்தனர். அதனைத் திருக்கண் சாத் தியருளிய சிற்றம்பல நாடிகள் கருணையால் ‘அவிச்சுவை யறிவான் தவச்சுவை யறியான்’ என்றருளினர். உலகத்துக் கல்வியில் விருப்பமின்றி உணவிலே பெருவிருப்புடையராய்த் திரியும் மக்களை நோக்கி ‘அவிச்சுவை யறிவான் கவிச்சுவை யறியான்’ எனச் சாமானியரும் கூறுதல் உண்டு. இஃது அதனினும் மிக உயர்ந்த பழமொழியன்றே! அவ்வருளிப்பாடு திருச்செவியிற் பட்டவுடன் கண்ணப்பர் பந்திமுடிந்தெழுந்து, பின்பு ஆசாரியர் திருவடிகளில் அடியற்ற மரம்போல் விழுந்து வணங்கி எழுந்து நின்று கும்பிட்டுக் கண்ணீரருவி மாருமல் ஆருகப் பெருக அழுது புலம்பி மௌனமாக வடக்கு நோக்கி யாத்திரை செய்யத்தொடங்கினர். சிலபல நாட்கள் சென்றன.

சிற்றம்பல நாடிகள் தம் மாணவராகிய அறுபது அடியவர்களும் ஒருசேரச் சித்திரைத் திருவோணநாளில் சமாதியிலிறங்குவதாக அரசனையழைத்துக் கூறி ‘ஆவனபுரிக’ எனக்கட்டளையிட்டருளினர். அரசனும் ஆசாரியர் கட்டளைப்படி தனித்தனியே சமாதியமைத்து விண்ணப்பித்தான். இந்த அற்புத நிகழ்ச்சியைக்காண மக்கள் பெருந்திரளாக வந்து கூடினர். எங்கெங்கும் அன்பர்கள் அலங்காரம் செய்தார்கள். கண்ணுங் கருத்தும் ஒன்றி ஞானசாரியரையே இமையாமல் எல்லோரும் நோக்கியிருந்தனர். குறித்தகாலம் சமீபித்தது. ஆசாரியர் அனைவரையும் அருட்கண்ணால் நோக்கி ஆசீர்வதித்தருளினர். வந்திருந்த அனைவரும் கேட்க மூன்று திருவெண்பாக்களை ஆசாரியர் அருளினர். பின்பு, தமக்கென அமைக்கப் பெற்றிருந்த சமாதியிலிறங்கினர், சிவானந்த நிட்டையில் சின்முத்திரை தாங்கி வீற்றிருந்தனர். மாணவரனைவரும் தனித்தனியே ஒவ்வொரு வெண்பாப்பாடிக் கொண்டே ஞானசிரியரது சமாதியை மும்முறை வலம்வந்து, எட்டுறுப்பும் நிலத்திலே பொருந்த விழுந்து வணங்கி எழுந்து, தத்தமக்கு அமைக்கப்பட்டுள்ள சமாதியிலிறங்கி நிட்டைகூடிச் சிவப்பேறடைந்தனர். அரசனும், அன்பரும், பிறரும் அதிசயித்துத் துதித்து நின்றனர். இப்பெறலரும் பேற்றை இத்திருக்கூட்டத்து அடியவருள் ஒருவர் மட்டும் அடையாமற் சென்றரே! எனப் பலருங் கூறிக் கவன்றனர். சிவனருள் இருந்தபடி என்றனர்சிலர். அக்காலத்துத் திடீரென, முன்பு வடக்கு நோக்கிச் சென்றிருந்த கண்ணப்பர் அங்கே யாவருங் காணத் தோன்றினர்; நிகழ்ச்சியை யுணர்ந்தனர். தமக்கென ஒரு சமாதியின்மையையும் கண்டார். ஆங்குள்ள எல்லாச்சமாதிகளையும் மும்முறை வலம் வந்தார்; வணங்கினார். தமது ஞானசாரியராகிய சிற்றம்பல நாடிகள் சமாதியின் திருமுன்பு சென்றார். ஆரா அன்பினால் நெக்கு நெக்குருகக் கசிந்து கண்ணீரும் கம்பலையுமாக நின்றார்.

“ஆண்டகுரு சிற்றம் பலவா! அடியேற்கா
மீண்டும் எழுந்தருள வேண்டாவோ?—நீண்டமால்
ஆரணனும் காணாத ஆனந்த வாரிதியைப்
பூரணமாய் வையாத போது” (வெண்பா-42)

என்றொரு வெண்பாவைப் பாடினர். அப்பொழுதே சமாதி பிளந்தது. ஞானசிரியர் கண்ணப்பரை நோக்கி 'அஞ்சற்க' என அமைத்த கரத்தைக் காட்டியருளி அழைத்து, அணைத்துத் தழுவித் தம்மோடு ஐக்கியம் செய்துகொண்டருளினா. 'இவர் பெற்ற பேறே பெரும்பேறு', 'இப்பேறு எவரும் பெற்றிலரே' எனக் கண்டார் யாவரும் அதிசயித்து ஆனந்தக் கண்ணீர் வார நின்று துதிசெய்தனர். அரசன்வியபபெய்திஞன், அச்சமும் அன்பும் மீதூரச் சமாதிகளையெல்லாம் அழகுறச் சமைத்தான், பூசைக்கு வேண்டும் நிபந்தங்களும் அமைத்துச் சிவப்பேறுபெற்ருன்.

இனி, சிற்றம்பலநாடிகள் மாணவருள் ஒருவராகிய சிவபுரம்-தத்துவப்பிரகாசர் 'தத்துவப்பிரகாசம்' என்னும் ஞான நூலை இயற்றியருளினர். அதன்கண் உள்ள திருவிருத்தம்-337. "தத்துவப்பிரகாசர் பதினைந்தாம் நூற்றுண்டின் முற்பகுதியிலே கும்பகோணத்துக்கு அண்மையிலுள்ள சிவபுரம் என்ற ஊரிலே பரம்பரைச்சைவ வேளாளர் மரபிலே தோன்றிக் கல்விகேள்விகளில் நிறைந்து, சீகாழியை அடைந்து, சிற்றம்பல நாடிகளிடத்திலே ஞானோபதேசம் பெற்றுத், திருவாரூர்சென்று வாழ்ந்து வந்தார். அங்குச் சிவபெருமான் திருக்கோயில் நிர்வாகத்தை வகித்து நடத்துங்கால் பட்டர்களுள் ஒருசாரார் சரிவரக கோயிற்காரியங்களை நடத்தாமை கண்டு அககாலத்திலே நாட்டையாண்ட விசய நகரத்து அரசரான கிருஷ்ணதேவ மகாராயரிடம் (கி. பி. 1509—1530) முறையிட்டார். அவர் விசாரணை செய்து கோயிற்பட்டர்களை மாற்றவே கோயிற்காரியங்கள் முட்டின்றி நடந்தன. தமக்குப் பின்னர் கோயிற் காரியங்களை நிர்வகிக்கவும், சைவசித்தாந்தசமயம் வளரவும் தமது சீடராகிய ஞானப்பிரகாசரை நியமனம் செய்தும், பக்குவிகளான சீடர்களுக்கு உபதேசம் செய்து கொண்டிருந்தும் சிவபரிபூரணம் அடைந்தார்," இவர் பாடிய தனிபபாடல்களும் பல. தத்துவப் பிரகாசர் தாம் அருளிய தத்துவப்பிரகாசத்தில் குருவணக்கம் கூறுமிடத்துத் தமக்கு அநுக்கிரகம் செய்த ஆசிரியர் சீகாழிச் சிற்றம்பலநாடிகள் எனக்குறிப்பிட்டிருக்கின்றனர்.

இனி, சிவஞானசித்தியார் பரபக்கத்துக்கு உரைவரைந்த ஸ்ரீ தத்துவப் பிரகாசர் வேறு. சிவபுரம்–தத்துவப்பிரகாசர் வேறு. முன்னவர் திருவொற்றியூர் ஞானப்பிரகாசரின் மாணவர். பரபக்கத்திறுதியிலுள்ள சில உரைக்குறிப்புக்களால் ஞானு வரண விளக்கத்தின்பின் இவ்வுரையியற்றியிருக்க வேண்டும் எனத்தெரிகிறது. ஞானுவரண விளக்கம் செய்தருளியவர்கள் தருமை ஆதீனத்து ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளுடைய மாணவர் ஸ்ரீ வெள்ளியம்பலவாணத்தம்பிரான் சுவாமிகள். காலம்–திருமலை நாயக்கர் காலம் (1623–1659) பதினேழாம் நூற்றாண்டின் இடைப்பகுதி. திருவாவடுதுறையாதீனத்து ஐந்தாவது ஞானகுரவர் ஸ்ரீ வேலப்பபண்டாரம் சித்தியார் பரபக்கத்துக்கும் ஒருரை எழுதியுள்ளார்கள்.

இனி, சிற்றம்பலநாடிகள் என்னும் பெயருடையார் பலர். அவருள் பெரிய பழுதைகட்டிச் சிற்றம்பலவர், சிறியபழுதை கட்டிச் சிற்றம்பலவர் என்னும் இருவர் சீகாழியிலே சிவாநுபூதிமான்களாகச் சிறந்திருந்தார்கள். அவர்கள் நூலொன்றும் இயற்றியதாகத் தெரியவில்லை. மற்றொரு சிற்றம்பலநாடிகள் திருச்செந்தூரகவல் பாடியுள்ளார். சீகாழிச் சிற்றம்பலநாடிகள் அவ்வகவலைச் செய்திலர் என்பது உறுதி. அவர்கள் செய்தருளிய துகளறுபோத நூலையும், இத்திருச்செந்தூரகவலையும் நுனித்து நோக்குவார்க்கு இனிது எளிதில் அது விளங்கும்.

---

குறிப்பு :— *மாயூரம் புகைவண்டி நிலையத்தின் மேற்கேயுள்ள சந்தையின் மேல்பால் ‘சித்தர்காடு’ என்னும் இடத்திலே ஸ்ரீ சிற்றம்பலநாடிகள் சமாதிக்கோயில் சிவாலய அமைப்பில் சாலையின் ஓரத்தில் உள்ளது. இரண்டுகால பூசைநடைபெற்றுவருகிறது. அறநிலையப் பாதுகாப்பாளரால் பரிபாலிக்கப்பட்டு வருகிறது.* குருபூசை சித்திரைத் திருவோணம்.

---

# பிழைதிருத்தம்

| கலித்துறை :— | | திருத்துக. |
|---|---|---|
| செய்யுள் | வரி | |
| 1 | 3 | நாடிநற்றேசிகனே |
| 2 | 4 | தாகக்கைக்கொண்டனனே |
| 5 | 3 | வேத்தச்சிற்றம்பல |
| 17 | 1 | பாசம் அறிவாவ |
| 30 | 1 | முத்தனைச்(பா—ம்) |
| 36 | 1 | சாக்கிராவத்தை |
| வெண்பா :— | | |
| 11 | 1 | மூன்றுரும் வியாதி |

குறிப்பு :—இப்பதிப்பிற்கண்ட பாடங்கள்சில அச்சிட்ட பிரதியில் வேருக உள்ளன காண்க.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

# கலித்துறை

திருவாவடுதுறையாதீனம்

1954

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

எனக்கினிய எம்மானை ஈசனை யானென்றும்
மனக்கினிய வைப்பாக வைத்தேன்—எனக்கவனைக்
கொண்டேன் பிரானாகக் கொள்வதுமே இன்புற்றேன்
உண்டே எனக்கரிய தொன்று.

திருச்சிற்றம்பலம்.

—காரைக்காலம்மையார்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிற்றம்பலநாடிகள் கலித்துறை.

## காப்பு

சீர்கொண்ட காழிச்சிற் றம்பல நாடிநற் றேசிகனைப்
பார்கொண்டு போற்றவோர் பாமாலை சொல்வனிப் பாவினுக்கிங்
கேர்கொண்ட சீர்தனை எல்லாம் நிறைந்திட் டிலங்கியிடப்
போர்கொண்ட மும்மதக் கற்பக யானையைப் போற்றுதுமே.

## நூல்

தாதவிழ் தாமரைப் பொற்று ளிரண்டுமித் தாரணிமேற்
போதநன் மாதவம் ஏதுசெய் தேன்றென் புகலிநகர்ச்
சேதன னுனைசிற் றம்பல நாடிநற் றேசிகனே!
ஈதென தாவி யுடலாகி யேநின்ற தெத்தவமே. (1)

தூயவெண் ணீற்றுச் சிற்றம் பலநாடி தொடர்ந்தருளால்
தீய மலங்கள் அறுத்துயிர் காட்டித் திருவருளில்
ஓய விருத்தி அமுதூட்டு நல்லுப காரத்துக்குக்
காய முயிர்பொருள் கைம்மாற தாக்கைக் கொண்டனனே. (2)

ஈதொரு வாசகங் கேட்டில ரேலயன் மாலிருவர்
தீதற ஆண்டசிற் றம்பல நாடி திருமுன்சென்று
போதமும் போதத் துயிரான போதமும் போதத்தின்ப
சாதமும் சாதப்பின் சாகா மனத்தையும் தந்ததுவே. (3)

காண்கின்ற கண்கதிர் காட்டாத போதில்லைக் காணவன்றே
பூண்கின்ற அண்ணல்தன் போதமல் லாதில்லைப் பூம்பொழில்கள்
சேண்சென்ற காழிச்சிற் றம்பல நாடி சிரபுரத்தோய்!
வீண்சென்று போனதிக் காலமெல் லாமெய் விளைவின்றியே. (4)

ஒன்ரு ணவத்துடன் ஒன்றுதல் போலும் உடம்பிலுயிர்
நின்ரு லதுவென்ன நின்றது போலும் நிமலனுடன்
சென்ருட வேத்தசிற் றம்பல நாடி சிரபுரத்தோன்
என்ருர்கள் காணும் பவக்கட லேறி யிருப்பவரே. (5)

அறிவாவ தென்றும் அவன்வார்த்தை கேட்டல் அதனின்மிக்க
அறிவாவ தென்றும் அவன்மேனி காண்டல் அதனின்மிக்க
அறிவாவ தென்றும் அவன்நாமஞ் செப்பல் அதனின்மிக்க
அறிவாவ தென்றும் அவனுயி ராக அறிகுவதே. (6)

என்னை இருத்தி அறிவித்த போதினும் என்னறிவில்
தன்னை இருத்தி அறிவித்த போதினும் தந்தகண்ணில்
பின்னை இருத்தி அறிவித்த வாறின்பப் பேற்றினுக்கு
முன்னை இருத்துசிற் றம்பல நாடி மொழியொன்றிலே. (7)

படைத்தளித் தாரென்றன் பாசம் பறித்திலர் அப்படைப்பைத்
துடைத்தொழித் தாரென்றன் உண்மைசொன் ஞரில்லைத் தொல்லை
அடர்த்தருட் டாடலை ஐம்முகர் தந்திலர் ஐங்கலையும் [யிருள்
உடைத்தொழித் தார்சண்பைச் சிற்றம் பலவர் ஒருவருமே. (8)

உள்ளே விழிக்கின் உணர்வாகி நிற்பர் உணர்வுதனக்
குள்ளே விழிக்கின் உணர்வல்ல ராகுவர் ஊறிமெத்தும்
கள்ளேயுந் தாமச்சிற் றம்பல நாடினர் வல்லகள்ளம்
விள்ளேன் ஒருவர்க்கும் ஆனந்த போகம் விளைந்ததுவே. (9)

அறிகின்ற தொன்றை அறியும் பொழுதறிந் தைம்புலனின்
பொறியின்றி ஒன்றையும் புந்திசெய் யேன்தென் புகலிநகர்ச்
செறிகின்ற சிற்றம் பலநாடி நின்று செலுத்துகையால்
குறிகொண் டறிவதுண் டோபொறி யோடும் கொணர்ந்துநின்றே.()

என்னறி யாமல் எனக்குத் தெளிவித் தெனதறிவில்
தன்னறி யாமலும் தந்துவிட் டானச் சதுமுகன்மால்
முன்னறி யாதசிற் றம்பல நாடி முதலியெங்கோன்
பின்னறி யாத பிழையனு காமற் பிழைத்தனனே. (11)

முத்தியும் பெத்தமும் ஒன்றாகக் காட்டி முழுதுநிறை
சத்தியும் காட்டிச் சதாசிவம் காட்டிச் சதுவிரண்டு
சித்தியும் காட்டுசிற் றம்பல நாடி சிரபுரத்தோன்
பத்தியும் ஞானமும் இல்லாத என்னைப் பரிந்தெடுத்தே. (12)

அன்றள வின்றள வாதார வாகிய அண்ணலைச்சென்
றொன்றிய தில்லை அவனறி வாய்நிற்க உம்பர்தொழச்
சென்றாங் காடுசிற் றம்பல நாடி சிரபுரத்தோன்
நின்ற நிலையில் அவனுடன் வாழ நிறுத்தினனே. (13)

பாற்கடல் வாழும் பணிலங்கள் நாவிலப் பால்நிறைய
எற்கறி யாமல் பிறிதிரை தேருமற் றிம்முறைபோல்
நீக்கறி யாவுயிர் ஆநந்தத் தோடு நிறைந்தைம்புலன்
காக்கறி யாமற்சிற் றம்பல நாடினர் காட்டினரே. (14)

அறிவும் செயலுமென் ஆசையும் அந்தக் கரணங்களும்
பொறியும் புலனும் புலனான போதமும் போக்கியின்பம்
செறியநின் றுண்டசிற் றம்பல நாடி சிரபுரனைப்
பிறியும் படிநினைந் தாலிது போலும் பிழைப்பில்லையே. (15)

அலைவற் றிருக்கைக் குபாயஞ்சொல் லென்றடி யேன்விரும்ப
அலைவற் றிருக்கைக் கருளிச்செய் தானண்டம் வெள்ளங்கொள்ள
அலைவற்ற காழிச்சிற் றம்பல நாடி அடுத்ததுநீ
அலைவற்ற வான்பொரு ளாகிநில் லென்றடி வைத்தனனே. (16)

அறியாமை பாச அறிவாவ தண்ணல் அதுவதுவாய்ச்
செறிவான் உயிரென்று தீரச்சொன் னான்தென் சிரபுரத்து
நெறிநாளும் நல்குசிற் றம்பல நாடிதன் நேர்களெல்லாம்
குறிநாடிப் பார்க்கில் இறைவால் லாத குணங்களின்றே. (17)

மொழியான் உரைக்கிற் குறிக்கப் படுமென்று மூதறிவால்
ஒழியா நிறைவையும் ஆநந்த வாழ்வையும் ஒண்புகலி
அழியா விரதன்சிற் றம்பல நாடி அகமகிழ்ந்து
விழியால் எனக்களித் தான்விழித் தேனின்ப மேலிட்டதே. (18)

ஒடுக்கம் விரித்தல் இறைவற்கு மில்லை உயிர்க்குமில்லை
அடுத்தது தானல்லன் ஆவான் இறைவன் அதுவுயிராம்
விடுத்தது பாசம் விடாதது மற்றின்ப நூலைமெய்யே
தொடுத்தருள் காழிச்சிற் றம்பல நாடினர் சொற்றனரே. (19)

வாக்கில் இருப்ப தவன்திரு நாமம் மனதுதனில்
தாக்கி இருப்ப தவன்திரு மேனி தரணிதனில்
போக்கி இருப்ப தவனேவல் என்றும் புகழ்ந்துமறை
காக்கும் கருணைச்சிற் றம்பல நாடியைக் கண்டபின்னே. (20)

அன்பால் அறம்பொருள் நால்வர்க் குரைக்கவன் ருலநிழல்
தென்பால் உகந்தசிற் றம்பல நாடி! நின் சீரருளால்
உன்பால் உருக்கிக் கலந்தடி யேற்கின்பம் ஊட்டியநீ
என்பால் உனக்குப் பயனென்கொ லோவென் றறிகிலனே. (21)

பொறிபுக் குழலுமென் போதத்தை மாற்றித்தம் பூரணத்தில்
குறிபுக்கு நின்று குறியா தவிழ்பவர் கூட்டந்தன்னில்
செறிவுக்கு நல்குசிற் றம்பல நாடி சிரபுரத்தோன்
அறிவுக் கறிவு திருமேனி யான தறிந்திலமே. (22)

பற்றறப் பற்றற என்பதெல் லாம்பசு பாசம்விடல்
மற்றொரு பற்றறல் இல்லையென் ருல்மன்னும் வெங்கலியைச்
செற்றருள் சிற்றம் பலநாடி வண்மைச் சிரபுரதத்தோன்
உற்ற தபோதன ரேயொழிந் தேயிரு மும்மையுமே. (23)

முன்புகண் டேனில்லைப் பாசம் பசுபதி மும்முதலும்
பின்புகண் டேனில்லை என்னகண் மாயம் பிறங்குதொண்டர்
அன்புகண் டாண்டசிற் றம்பல நாடி அருட்புறவோன்
இன்புகண் டாலித்தி யானுற்ற வாறென்கொல் எண்ணுவதே. (24)

பாசந்தந் தானில்லை வாங்கிய பின்பர மானந்தத்தே
பாசந்தந் தானது வாங்கிய தெப்படிப் பாலனுக்குப்
பாசந்தந் தானைப் பதத்தால் உதைத்தந்தப் பாலனுக்குப்
T சந்தந் தாண்டசிற் றம்பல நாடி பராபரனே. (25)

பூம்பொழிற் காழிச்சிற் றம்பல நாடியைப் பூசித்தபேர்
தாம்புவி தன்னில் தவங்கள்செய் யார்கள்சா ரூப்பியத்தில்
போம்படி யோகத் தியானத் திரார்கள் புனிதனுயிர்
ஆம்படி கண்டு பரபோகம் துயத்திளைப் பாறுவரே. (26)

நில்லா உடலும் பொருளும் நிலையென நின்றுணரும்
பொல்லாத புன்மையர் புன்மையை நீத்துப் புலன்வழியிற்
செல்லா தொழித்தசிற் றம்பல நாடி சிரபுரத்தோன்
எல்லாம்பொய் என்றிரு பாதம்வைத் தான்இன்பம் மேலிட்டதே. ()

துண்டத்துக் கண்வைத்துத் தூர மனம்வைத்துத் தோன்றுசுடர்
கண்டத்தைக் கண்டு கருத்தழி யாமல் கருதுசமன்
தெண்டத்தை மாற்றுசிற் றம்பல நாடி சிவானந்தத்தே
வண்டொத் தருந்தி நினைப்பு மறப்பற்று வாழுமினே. (28)

ஆபாச ளுகி அணுவா யிருந்த எனையழைத்து
நீபாவி பாசத்தில் நின்றிளைத் தாயென்று நீக்கிஎன்மேல்
சீபாதம் வைத்தசிற் றம்பல நாடி திருவுருவா
யேபாவி சீவனை என்றிசைத் தான்என்கண் இன்புறவே. (29)

முத்தினைச் சிற்றம் பலநாடி ஞனை முழுமுதலை
அத்தனை அத்தனென் றுதரிப் போர்களா தாரமென்றே
பித்தினை நீக்கிப் பிறப்பிலி என்று பிறக்கணித்தீர்
இத்தனை யோமலங் காளிது காலம் இரங்கியதே. (30)

எல்லாம் அறிந்த அறிவாகி நின்றிடும் இச்சைதொழில்
புல்லாமற் புல்கிடும் பூரண இன்பமப் பூரணமே
நில்லா நிலைமை சுகாதீத உண்மை நிகழுமப்பால்
செல்லார் பொழிற்சண்பைச் சிற்றம் பலவர் திருவுருவே. (31)

தத்துவக் கத்தும் சமய விரோதமும் சாத்திரம்சேர்
பொத்தகப் பித்தையும் புந்தி மதத்தையும் போட்டிடென்று
வித்தகன் சிற்றம் பலநாடி வேணு புரத்திறைவன்
உத்தம மான சிவானந்த போகத்தை ஊட்டினனே. (32)

சண்ணைக் கதிபதி சிற்றம் பலவனென் சஞ்சிதமாம்
புண்ணைக் குரம்பையும் போகா இருளும் பொருந்திவரும்
பண்ணைக் கெடுத்துத்தன் பாதத்தி லேபணி வித்தவன்றே
எண்பத்து நான்குநா றுயிரந் தாயரும் ஏங்கினரே. (33)

சங்கார காலந் தனிலோர் மலத்தொடு சார்தலுமாம்
தொங்கா துடல்விடும் காலமு மாம்தொல் கருவியெல்லாம்
பொங்காமல் மாற்றிய போகம் புகல்கின்ற காலமுமாம்
நங்காதல் காழிச்சிற் றம்பல நாடி நவின்றனரே. (34)

மலங்கார ணலன் றவத்தையுண் டானது மாயையினால்
துலங்கா துணர்த்து முறைமையுண் டானதுந் துய்ப்பதற்கு
நலங்காண ஈசன் நடித்தலுண் டான தெனநவின்றான்
தலங்காண வந்தசிற் றம்பல நாடி தவத்தரசே. (35)

சாக்கிரச் சாக்கிர வத்தை யவத்தை யுணர்த்துந்தன்மை
நீக்கிய நாலுக்கு மிப்படி யாகு மெனநிகழ்த்தித்
தாக்கிவைத் தாண்டசிற் றம்பல நாடிதண் காழியண்ணல்
ஆக்கிய போதமெய் யானந்த போதமு மாய்விட்டதே. (86)

சுத்தக் கருவிகள் ஐந்துங்கொண் டேசொல் லவத்தையைந்தும்
சித்திக்கும் போதத்தில் ஒன்றொன்று சென்றிடும் சென்றதெல்லாம்
பத்திக்கு நல்குசிற் றம்பல நாடி பயின்றதெல்லாம்
முத்திக் கரையது வாய்ச்சிவ போகமும் முன்னின்றதே (37)

தருக்கி யுருக்கொண்டு தான்பிறந் துய்த்தல் சகலமதாம்
சுருக்கி யுபாதியைத் தூநெறிக் கேவைத்தல் தோன்றல்சுத்தம்
இருக்கில் இருக்கும் சிவபோகம் துய்த்தல் இறைகலத்தல்
செருக்கி யுணர்த்துசிற் றம்பல நாடினர் செப்பினரே. (38)

மூலக் கனலை முடுகி முடுகி முழுமதியின்
பாலைப் பருகிப் பரவெளிக் கேசென்று பற்றிநின்றார்
ஞாலத்தில் வந்தசிற் றம்பல நாடி நறும்புறவோன்
சீலத்திற் றந்த சிவானந்தம் போலுமெய்ச் சித்தியன்றே. (39)

சுற்று நடுவொடு கீழ்மேலு மெங்கும் சுகவடிவாய்ச்
சற்றும் சலிப்பற்ற தன்மையுன் னார்சில சாத்திரங்கள்
கற்றும் பிறருடன் கேட்டும் பலருடன் கத்தியும்போய்
மற்றும் புவனத்தில் ஆசை விடாமல் மயங்கினரே. (40)

அந்தரம் காற்றங்கி நீர்மண்கொண் டேநின்ற வையமெல்லாம்
இந்திர சாலம் எனக்காட்டி மீட்டும் இறைநிறைவில்
தந்தருள் சிற்றம் பலநாடி வண்மைத் தவப்பெருமான்
வந்தபின் காணும் சிவலோக வாசல் வழங்குவதே. (41)

சிற்றைக் கதிபதி நந்தியெங் கோன்திரு வாக்குலகோர்
பற்றைத் தவிர்த்துச்சன் மார்க்கத்தை நல்குமிப் பண்புமன்றி
மற்றைச் சமயத்தை வாயடக் காநிற்கும் மாயம்செய்யும்
தெற்றைப் பிடுங்கிச் சிவலோக வாசல் திறப்பிக்குமே. (42)

வனக்கே தகைபுடை சூழ்காழி காவலன் மன்னுமன்பர்
சினக்கேண்மை செற்றசிற் றம்பல நாடி திருவுருவை
எனக்கே தெரியுமற் றென்னையு மாட்கொண்ட இவ்வருமை
உனக்கே தெரியும் தெரியாது பின்னை யொருவர்க்குமே. (43)

ஆறாறு நீக்கி அருட்கரைக் கேயிளைப் பாற்றும்பின்னை
ஏறாத வாரிதிக் குள்ளே அழுத்திடும் என்வினைக்கு
மாறான சிற்றம் பலநாடி வண்மைச் சிரபுரத்தோன்
பேறாக நம்மைப் பிழைப்பிப்பன் என்றவன் பின்செல்லவே. (44)

பூரண போத புரத்தே யிருந்தின்ப மேனிபுகக்
காரணன் சிற்றம் பலநாடி யன்றியக் காழியிலே
ஆரண மாமுடி மேலன்பர்க் கானந்த மேயளித்துக்
கோரணி யான சமையோர்க் கெனக்கொடி கட்டினனே. (45)

எல்லையில் காலம் தவமுயன் றோமில்லை எத்தியன்பர்
சொல்லை இரங்கித் தொழுதுநின் றோமில்லைத் துய்யவருள்
தில்லையுள் ஆடுசிற் றம்பல நாடி சிரபுரத்தோன்
ஒல்லையில் என்னை யொழித்தின்ப ஆனந்த மூட்டினனே. (46)

தேன்பாய் இதழிச்சிற் றம்பல நாடி சிரபுரத்தோன்
தான்பாசம் தீர்த்தன்பர்க் கானந்த வாரி தனைவழங்க
ஆன்பாலும் அன்னை முலைப்பாலும் உண்டின் றளவுமையோ!
நான்பாவி யாய்த்திரிந் தேன்பர மானந்த நண்ணுதற்கே. (47)

தீதற்ற காழிச்சிற் றம்பல நாடியைத் தெய்வமென்றே
பாதத்துக் கேற்ற பணிகள்செய் யாமல் பாந்துகெட்டேன்
போதத்துக் கேற்ற புலன்வழி யேசென்று பொய்பிதற்றி
வேதத்துக் கேற்ற சிவானந்த போகத்தை விட்டனனே. (48)

ஆனந்த மேசெவி அம்புயத் தாளிணை அங்கைகளும்
ஆனந்த மேதிருக் கண்ணும்செவ் வாயருள் மேனியெல்லாம்
ஆனந்த மேயருட் சிற்றம் பலவர் அருட்பொருளும்
ஆனந்த மேயவன் தில்லையும் காழியும் ஆனந்தமே. (49)

மானைப் பொருத விழியார் மயக்கில் மயங்கியஞ்சி
ஆனைக் கனைதறி யாயுழல் வேனைவந் தஞ்சலென்றான்
தேனொத்த சிற்றம் பலநாடி வண்மைச் சிரபுரத்தோன்
ஞானக் கொடைமுகில் நந்தாத சிற்றைக்கு நாயகமே. (50)

அறங்காட் டியவட நீழலில் நால்வர்க் கறத்தினுண்மைத்
திறங்காட் டியவெண்ணை மெய்கண்ட நாதன் திருமுன்சென்றேன்
நிறங்காட்டி என்னையுந் தன்னிற மாக்கிவெண் ணீற்றையுமிட்
டுறங்காச் சமாதிதந் தான்பர மானந்த வுண்மையிலே. (51)

போதித் தருள்தரு சிற்றம் பலவர் புகலிநகர்ச்
சோதித் திருவுருத் தோன்றிய போது தொடங்கியெனைப்
பேதித் தறிவை அகலாத பாசப் பெருக்கமெல்லாம்
ஆதித்த னைக்கண்ட புற்பனி போல அகன்றிட்டதே. (52)

செழுமலர் மென்குழல் மாதர் உதரத்திற் சென்றுசென்று
புழுமல ஆக்கை எடுக்கவொட் டேன்புனற் சேற்றுழவர்
உழுமலம் பட்டுவெண் சங்கம் சொரிமுத் தொதுங்கும்வயற்
கழுமல மன்னுசிற் றம்பல நாடியைக் கண்டபின்னே. (53)

*ஒன்றென்று சொல்பவர் சொன்னாலும் சொல்லுக ஒன்றிரண்டாம்*
*என்றென்று சொல்பவர் சொன்னாலும் சொல்லுக வத்தியன்பர்*
*சென்றங்கு நல்குசிற் றம்பல நாடி சிரபுரத்தோன்*
*அன்றென்றி தாமென்று சொல்லாத முத்தி அளித்தனனே.* (54)

*திருச்சிற்றம்பலம்*

---

**சீகாழிச் சிற்றம்பலநாடிகள் கலித்துறை**
**முற்றிற்று.**

---

ஸ்ரீ மெய்கண்டதேவர் மிளிர்கழல் வெல்க.
ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் மலரடி வாழ்க.

---

குறிப்பு :— ஏடுகளில் காப்புச் செய்யுள் இல்லை. அச்சிட்ட பிரதியில்மட்டும் உள்ளது.

| பக்— | செய்— | திருத்தம் |
|---|---|---|
| 3 | 2 | *தாகக்கைக்* |
| 8. | (89) ஐ (36) *எனத்திருத்துக.* | |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிற்றம்பலநாடிகள் கலித்துறை

## செய்யுள் முதற்குறிப்பகராதி

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சீகாழிச் சிற்றம்பலநாடிகள் வெண்பா

திருவாவடுதுறையாதீனம்

1954

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

கருத்திலுல் நீகருதிற் றெல்லாம் உடனே
திருத்தலாஞ் சிக்கெனநான் சொன்னேன்—பருத்தரங்க
வெள்ளநீ ரேற்றான் அடிக்கமலம் நீவிரும்பி
உள்ளமே எப்போதும் ஓது.

திருச்சிற்றம்பலம்

—காரைக்காலம்மையார்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிற்றம்பலநாடிகள் வெண்பா

## விநாயகர் காப்பு

செய்யபுகழ் மேனியனைத் தேவர் தொழுங்கோவை
மெய்யருளும் பொய்யா விநாயகனை—வையமெலாம்
காத்தானை யார்க்கும் இளையானைக் கந்தற்கு
மூத்தானை நாவே மொழி.

## நூல்

என்னை வினையறியா யானும் அதுவறியேன்
முன்னைவினை கூடல் மொழிந்தருளாய்—என்னத்
திருவார் பொழிற்காழிச் சிற்றம் பலவன்
தருவானும் நானென்றான் தான். (1)

கண்ணுக்குக் கண்காட்டா காட்டும் கதிரொளிகள்
பெண்ணுக்குப் பெண்விளையா பேரின்பம்—எண்ணெக்கச்
சொல்வா ருயிர்க்குயிராய்த் தோய்ந்துணர்த்தி இன்பருத்த
வல்லான்சிற் றம்பலவன் வந்து. (2)

சென்றறிய வேண்டாவே சேராமை வேண்டாவே
ஒன்றுபட வேண்டாவே உள்ளத்தே—நின்றநிலை
கண்டாயே எங்கும் கதிரொளிகண் காயமெல்லாம்
உண்டான தன்மைபோல் உற்று. (3)

உற்றுணர்வுக் குள்ளே ஒளியா வுணர்வுணர்த்தப்
பெற்றாயே எவ்வுயிர்க்கும் பேறதனை—மற்றதுதான்
மாண்டதே பார்ப்பளவில் மாளா நிறைவுநம்மைப்
பூண்டதே என்றே புகல். (4)

தங்களைநாம் இன்பத் தடங்கடலின் மூழ்குவித்தோம்
அங்குலகம் தீர மறப்பித்தோம்—இங்குலகில்
வாராதே வாதனையால் வந்தீரே யாமாகில்
பாராதே பாரீர் பரம். (5)

பக்கமொடு கீழ்மேலும் இல்லாப் பராபரத்தை
ஒக்க நிறுத்தியதில் ஒன்றாக்கி—மிக்க
சிவபோகம் நல்கினன் சிற்றம் பலவன்
அவபோகம் செல்லா வணைத்து. (6)

கருவி கரணமுடன் கைகலந்து நின்று
மருவும் விடயமெல்லாம் வாங்கி—அருகாமல்
சீவிப்பாய் நீஎன்றான் சிற்றம் பலநாடி
பாவித்தே பாராமற் பார்த்து. (7)

கருவி கரணங்கள் கண்டுணர மாட்டா
மருவியதில் ஆன்மாவும் வாரா—குருபரன்தான்
சிற்றம் பலநாடி தென்கா ழியர்பெருமான்
உற்றுணர்த்தாப் போதென் றுணர். (8)

அட்ட வராகமுடன் ஐந்துவச ளுதிகளும்
ஒட்டும் உயிர்ச்செயல்கள் ஓரிரண்டும்—விட்டகலச்
சிந்தா மணியான சிற்றம் பலநாடி
தந்தான்பொற் செங்கமலத் தாள். (9)

வாக்காதி நான்கும் வருங்குணங்கள் ஒன்பானும்
போக்காமூன் றேடணையும் போனதே—நோக்கின்
இணங்கரிய சிற்றம் பலநாடி தாளை
வணங்கினேந் தெப்பொழுதும் வாழ்த்து. (10)

ஆசயங்கள் ஐந்துமூன் றாறு வியாதிகளும்
தேசுமலம் ஐந்தும் செயகோசம்—ஓசைதரும்
தாதுக்கள் ஏழும் தணத்தான்சிற் றம்பலவன்
மேதக்க காழிநகர் வேந்து. (11)

மண்டலங்கள் மூன்றும் மருவுமா றுதாரம்
கொண்டு திரியுடம்பின் கூறிரண்டும்—விண்டகலச்
சிந்தா மணியான சிற்றம் பலநாடி
தந்தான்பொற் செங்கமலத் தாள். (12)

கரையிறந்த பேரறிவு கண்டதும் நீக்கி
உரையிறந்த ஆனந்தம் உண்டு—திரையிறந்த
வாரிதிபோல் நில்லென்று வைத்தான்சிற் றம்பலவன்
ஆருதவு வாரிவன்போல் ஆங்கு. (13)

என்னை மறைத்தஇருள் எங்கேனும் போனதோ
நின்னருளிற் கெட்டதோ நின்றதோ—முன்னைத்
தவகுருவே! தத்துவப்ர காசனே! சண்பைச்
சிவகுருவே! நாயேற்குச் செப்பு. (14)

அல்லார் பொழிற்காழி அம்பலவன் தன்வார்த்தை
எல்லாம் சிவமாய் இருந்ததே—தொல்லாழி
வெள்ளம் பரந்தக்கால் வேறுபுனல் தோன்றாபோல்
உள்ளம் சிவத்தே ஒளித்து. (15)

குலாலன் திகிரி சுழல்வண்டு கொள்ளி
உலாவும் கறங்குவரி ஒத்தே—மலாதியால்
ஆரா அடியேன் உலகில் அலம்வருகை
பாராய் திருவேகம் பா. (16)

மாதவா! மாயை மரித்தாள் மரித்திடத்தே
பேதமிலாப் போதன் பிறந்தானே—ஆதலால்
ஆசௌசம் தானிரண்டும் ஆனேன்நான் பூசிக்கத்
தேசா!சிற் றம்பலவா! செப்பு. (17)

வேலையலை போலெனக்கு மேதினியில் வாதனைநோய்
வேலை யலையெறிந்து விட்டதே—வேலைபோல்
நித்திய கோசரத்தில் நில்லென்றான் காழிநகர்
அத்தன்சிற் றம்பலவன் ஆங்கு. (18)

பாசமும்நீங் காமல் பதியிற் கலவாமல்
ஆசறுநன் முத்தியெனக் காக்கினுன்—தேசிகர்கோன்
செந்நெல் வயற்காழிச் சிற்றம் பலநாடி
தன்னருளுக் குண்டோ தரம். (19)

காயம் அவரவராய்க் காணும் கருத்தொழிந்து
காயமொழிந் தான்மாவைக் காணேனே—நாயனே
தென்புகலித் தேசிகனே! சிற்றம் பலவனே!
என்புகல்வேன் என்செய்கேன் யான். (20)

காயமொழிந் தான்மாவைக் கண்ட முறைமைபோல்
தூயஅருள் தோன்றவுயிர் தோன்றுமல்—ஏயதற்குத்
தந்தருள்வன் சிற்றம் பலநாடி சண்பையர்கோன்
வந்தருளப் போனவா மாண்டு. (21)

உற்றவுயிர் தோன்றுமல் உள்ளுணர்வு தோன்றுவபோல்
பெற்றவருள் தோன்றுமல் பேரின்பம்—முற்றுமிகக்
காட்டினுன் சிற்றம் பலநாடி காழியர்கோன்
வாட்டினுன் வாதியா மல். (22)

நாறு விதத்தாலும் நான்நினைந்து பார்ப்பளவில்
ஆறு அறிவழிின் அல்லாது—வான்நாடும்
தென்புகலிச் சிற்றம் பலநாடி சேர்த்தளித்த
இன்பருந்த வாரா தெமக்கு. (23)

சிற்றம் பலநாடி சீபாத வல்லபங்கள்
சொற்றிகழும் பைங்கிளியே! சொல்லக்கேள்—உற்றவரும்
காணுது காட்டியது காணுது காட்டியது
காணுது காட்டியது காண். (24)

ஆணவம்போம் மாயைபோம் ஆன இருவினைபோம்
நாணவரும் மாமாயை நாணமும்போம்—வேணுபுரத்
தேசிகர்கோன் சிற்றம் பலநாடி சேவடியைப்
பூசைசெய யாம்பூண்ட போது. (25)

ஆற்றவரி தாற்றவரி தையகோ ஆணவநோய்
வேற்று விகாரம் மிகக்கொடிது—மாற்றுதற்குத்
தேசிகர்கோன் என்பளவிற் சிற்றம் பலநாடி
மாசிதுவோ என்றுரைத்தான் வந்து. (26)

தேனேயும் கண்மலரால் சிற்றம் பலநாடி
தானேதன் பேரின்பம் தந்தானே—ஊனே
நெருக்கினக்கால் அல்லாது நீளமிர்தம் தாரீர்
கருப்பினங்காள்! உங்களுக்கென் காண். (27)

அன்றிலே! இன்ப அகண்டபரி பூரணத்தில்
ஒன்றிலே என்னை ஒழித்தவரார்—சென்றுமதித்
தேவாகும் காழிநகர்ச் சிற்றம் பலநாடி
காவாமற் காத்தருள்வோன் காண். (28)

கான மயிலே! கடல்சூழ்ந்த காழிநகர்த்
தேனவிழ்தார்ச் சிற்றம் பலநாடி—மானிடரில்
என்றுடல் ஆடாதே இன்பம் திகழ்மன்றில்
அன்றாடி ஞன்என்றே ஆடு. (29)

பலவின் சுளையருந்தும் பைங்கிளியே! உன்றன்
மலவின் கிளையறுக்க வல்லான்—தலமுழுதும்
சென்று தொழுங்காழிச் சிற்றம் பலநாடி
என்றொருவன் காணும் இதற்கு. (30)

தேடும் பொருளுடனே சேமித்து விட்டனரோ
நாடும்தம் ஊர்பேரும் நானிலத்தோர்—வீடறிஞர்
சேமமே போற்காழிச் சிற்றம் பலநாடி
நாமமே கேட்பதல்லால் நாம். (31)

சர்க்கரையென் றால்இரதம் தானுமோ நெஞ்சமே!
சிற்பரன்சிற் றம்பலவன் தேசிகர்கோன்—நற்பதத்துள்
நில்லாயே ஆகில் நெடுநாளே நீகற்ற
சொல்லாலே ஆமோ சுகம். (32)

நூல்கொண் டுணர்வனவும் நண்ணுணர்வாற் சொல்வனவும்
பால்கொண்டு விற்பான் பயன்போலும்—கால்கொண்
டறியாமை மாற்றுசிற் றம்பலவன் வைத்த
நெறியே நிலையாக நில். (33)

என்பிறவித் துன்பறுப்ப தென்றோசிற் றம்பலவா !
நன்பிறவி என்போல நண்ணினாய்—இன்புறவே
பொய்யாத நால்வர்க்கும் போதித்த மோனவுரைக்
கையா ! கருணா கரா ! (34)

விகற்பமிலா ஞானம் விமலனார் ஞானம்
விகற்பமெலாம் மிக்கசடம் தானும்—விகற்பமெலாம்
என்னாலே என்றான் எழிலார்சிற் றம்பலவன்
உன்னாலே என்றுரைத்தான் உற்று. (35)

போக்குவர வில்லை புனிதற்கும் மாயைக்கும்
போக்குவர வாருயிர்க்கோ போற்றென்றேன்—போக்குவர
வங்கங்கே என்றான் அருளாற்சிற் றம்பலவன்
இங்கிங்கே என்றுரைத்தே னியான். (36)

இன்றகன்று நின்றீர் இனிக்கூட வாரீரே
அன்றகலா மும்மலங்கள் அல்லவோ—துன்றுபவம்
தீர்த்தருளும் சிற்றம் பலநாடி காழியர்கோன்
பார்த்தருளக் கண்டுபயப் பட்டு. (37)

யானெனது நீக்கி இறைநிறைவில் ஒன்றாக்கி
யானெனது நீக்கா திருத்தினான்—யானெனது
தங்கா தவர்போற்றும் சண்பைச்சிற் றம்பலவன்
மங்காமற் காத்தாண்ட வாறு. (38)

உன்னுவதும் உன்னாலே உன்னா தொழிந்துநிலை
மன்னுவதும் உன்னாலே மற்றில்லை—என்னுமது
நானறியேன் சிற்றம் பலநாடி நானேநீ
தானறிவை யாரறிவார் தான். (39)

இறந்துபிறந் தெய்த்த இளைப்பொழிக்க என்றோ
பிறந்துலகில் வந்தாய் பிரானே !—அறந்திகழும்
போதா ! புராதனா ! பூரணா ! பூம்புகலி
நாதா !சிற் றம்பலவா ! நான். (40)

மைந்தா ! எனஅழைத்து மாயா உடலகற்றி
இந்தா அறிவென் றிசைவித்தாய்—எந்தாயே !
ஆதாரம் ஏதென்றேன் ஆங்கறிவே தானென்றான்
தாதார் மலர்த்தாள்கள் தந்து. (41)

ஆண்டகுரு சிற்றம் பலவா ! அடியேற்கா
மீண்டும் எழுந்தருள வேண்டாவோ—நீண்டமால்
ஆரணனும் காணாத ஆனந்த வாரிதியைப்
பூரணமாய் வையாத போது. (42)

யானோ பிறந்தேனும் யானோ இறந்தேனும்
யானோ மறந்தேனும் என்வாழ்வே ! —ஊனமிலா
உன்னுள்ளே யானும் உலாவவே நீநிறைந்திட்
டென்னுள்ளே நின்றமையா லே. (43)

பட்டதே மூலவினை பாறிற்றே ஏறும்வினை
விட்டதே இவ்வுடலின் மிக்கவினை—நட்டதே
சிற்றறிவிற் பேரறிவு சிற்றம் பலநாடி
பொற்கழல்வைத் தாட்கொண்ட போது. (44)

ஊட்டி உறக்கி உணர்த்தி நடத்தியெனைக்
காட்டி அறிவிற் கலப்பித்துத்—தேட்டமறத்
தந்தான்சிற் றம்பலவன் சண்பைத் தவராசன்
வந்தான் இதற்கோ மகிழ்ந்து. (45)

நின்றநிலை தானே நிலையிதற்கு நீபிரிந்திட்
டொன்றும் விகற்பித் துணராதே—என்றான்
திருமருவு காழிநகர்ச் சிற்றம் பலவன்
மருமருவு தாடலைக்கே வைத்து. (46)

நீங்காமல் என்னறிவில் நின்று நிறைந்தருளி
நீங்கா உடல்உலகாய் நின்றனையே—யாங்காண
வந்திருந்த சிற்றம் பலநாடி! வாய்த்தசுகம்
தந்திருந்தும் இப்படியோ தான். (47)

பார்த்தபொழு தெல்லாம் படுபிணமென் றிவ்வுடலைப்
பேர்த்தறிவில் வைத்த பெருமானே!—சேர்த்தபுகழ்
மெய்கண்ட நாதனே! வெங்குருச்சிற் றம்பலவா!
கைகண்ட துன்வடிவே காண். (48)

தானே எனைவிரும்பித் தானே சமைந்தருளித்
தானே எனையாண்ட தம்பிரான்—தானே
தனக்கினிய சிற்றம் பலநாடி தான்போல்
எனக்கினிமை உண்டோ இனி. (49)

போதாதோ இப்பிறப்புப் போந்தக்காற் போந்தபயன்
நாதாந்தச் சிற்றம் பலநாடி—வேதாந்தத்
தந்தத்தே வைத்தருளி அப்போதே வந்தநிலை
சிந்தைத்தே ஆகும் சிவம். (50)

அறிவு சதுவிதங்கள் ஆன்மாக்கள் மூன்று
வெறிமாயை நான்குவித மிட்டுப்—பிரியாத
தீவினைகள் தானறியச் செப்புசிற் றம்பலவா!
மேவுபுகழ் வெங்குருவாழ் வே. (51)

ஏன்றவுடற் கன்மமாய் இன்னாத சஞ்சிதமாய்
ஆன்றுவரும் ஆர்ச்சனையும் ஆராது—தோன்றியிடும்
தீவினையார் நல்வினையார் சிற்றம் பலநாடி
தூவினையார் போனார் தொலைந்து. (52)

நாதாதி வாக்காதி நான்குதரும் அக்கரக்கள்
தாதாரும் மந்திரங்கள் சாத்திரங்கள்—போதவே
தந்தருளும் மாமாயை சண்பைச்சிற் றம்பலவர்
வந்தருளப் போனவா மாண்டு. (53)

பார்க்கிற் பரமசுகம் பாரா விடில்உலகாம்
நீர்க்கிரதம் நின்ற நிலைபோல—ஏற்க
உரைத்தான் சிற்றம்பலவன் ஒண்காழிக் கோமான்
கரைத்தான் கரையாக் கனம். (54)

மன்னும் மருபாடி வாய்த்த அருள்மைந்தர்க்
கின்னமொரு போதம் இயம்புவோன்—தொல்லுலகைப்
பைம்மறியாப் பார்க்கில் பரையாகும் அப்பரையைப்
பைம்மறியாப் பார்க்கில் பரம். (55)

சூதான உள்ளுணர்வும் தொல்லைஇருள் ஆணவமும்
வேதாவும் மாலுமாய் விட்டதே—நாதாந்தச்
சிற்பரமாம் சிற்றம் பலநாடி தேசிகர்கோன்
தற்பரன்வந் தாண்டதற்பின் தான். (56)

பாவி படுமனமே! பாவிநீ பஞ்சமலத்
தாவி சடந்தவிராச் சண்டாளா!—ஓவாமல்
அன்றே அறிவாய் அகண்டபரி பூரணமாய்
நின்றே அழுந்திலையே நீ. (57)

நீயே பகையுனக்கு நில்லா உடலுலகப்
பேயே உறவாகப் பேணினையே—தூய
அறிவுக் கறிவாய் அகண்டமாய் நீங்காச்
செறிவுக்குள் நில்லாமற் சென்று. (58)

தன்னைநான் காணில் தனித்தமுதல் அல்லவே
என்னையான் காணில் இரண்டாவேன்—மன்னுபுகழ்ச்
சைவா! சிற்றம்பலவா! சண்பை நகரதிபா!
எவ்வாறு காண்பே னியான். (59)

தன்னை உணர்வென்னில் தானாய்நான் நின்றிடுவேன்
என்னை உணர்வென்னி லியானவன்—பின்னமறச்
சும்மா இருக்கிற் சுகமாவேன் தோணிபுரத்
தெம்மான்சிற் றம்பலவன் இன்று. (60)

*பிறவார் இறவார் பெருந்துயரம் எய்தார்*
*மறவார் நினையார் மருளார்—புறவாரும்*
*தேசிகனும் சிற்றம் பலநாடி சேவடியில்*
*வாசமலர் இட்டிறைஞ்சு வார்.* (61)

*போதத் திருக்கறுக்கப் பொற்சிந்தை நந்தியாய்*
*மேதினியில் வந்தருள வேண்டிற்றே—தீதிலா*
*ஆரணங்கள் நான்கும் அயன்மாலும் காணாத*
*பூரணமோ கெட்டேனிப் போது.* (62)

*மூலமலம் ஒன்றுடனே முற்றிவரும் கேவலம்பின்*
*சாலுமதோ மாயை தரும்சகலம்—தூலமிலாச்*
*சுத்தவத்தை தோணிபுரத் தோன்றல்சிற் றம்பலவன்*
*வைத்தபடி காட்டினான் வந்து.* (63)

*கால்வாங்கி ஏங்கியது கான்று நினைவுவரும்*
*மேலாங் குணர்வோடு மீதழியும்—மாலாய*
*சாக்கிரத்தில் ஐந்தவத்தை சண்பைச்சிற் றம்பலவர்*
*போக்கியபின் தந்தார் பொருள்.* (64)

*அதிரும் புலன்கரிகள் ஆயுமனம் திண்டேர்*
*கதியொன் றியகுணமாக் காலாள்—சதுரங்கம்*
*பூட்டினுப் போலிருக்கப் புக்கடிநிற் கும்புதுமை*
*காட்டினான் அம்பலவன் காண்.* (65)

ஆக வெண்பா **66.**

*திருச்சிற்றம்பலம்*

**சீகாழிச்சிற்றம்பல நாடிகள் வெண்பா**

**முற்றிற்று.**

---

**ஸ்ரீ மெய்கண்டதேவர் மிளிர்கழல் வெல்க.**
**ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் மலரடி வாழ்க.**

---

குறிப்பு :— **ஏடுகளில் காப்புச்செய்யுளும், 36-வது வெண்பாவும் இல்லை. ஆக வெண்பா 64. அச்சிட்ட புத்தகத்தில் மட்டுமே அவை அதிகமாகக் காணப்படுகின்றன.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிற்றம்பலநாடிகள் வெண்பா

## செய்யுள் முதற்குறிப்பகராதி

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

# தாலாட்டு

திருவாவடுதுறையாதீனம்
1954

திருச்சிற்றம்பலம்

செம்புறு களிம்பென அநாதிமலம் மூழ்கியிருள்
சேரும்அலர் விழிஎன்னவே
தெளிவற்ற கேவலத் தசைவற் றிருந்துமல
சேட்டையாற் குழவிகுருடர்
தம்பிணியி னல்உற்ற பால்கோலை நோக்கஅவை
தமைஅளிப் பார்என்னநான்
சார்கன்ம மாயையை விரும்பநீ தந்திடச்
சகலனாய்ச் சுழல்கறங்கு
பம்பரம தென்னநீள் பிறவிச் சுழிக்குளே
பட்டுழல் பெரும்பாவியேன்
பாழான மலமற்று வினையற்று மாயையின்
பற்றுவிட் டினையறிந்துன்
அம்பொனடி நீழல்சேர்ந் தானந்தம் உண்டுநான்
அதுவாய் இருப்பதென்றோ ?
அருள்ஞான வாரியே! ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும்அரசே.

திருச்சிற்றம்பலம்

— ஸ்ரீ அகிலாண்டேசுவரி பதிகம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிற்றம்பலநாடிகள் தாலாட்டு

உலகுபுகழ் மெய்கண்டான் உண்மைஞா னுகரத்தின்
பலனுணர்ந்த சிற்றம் பலநாடித் தேசிகனே. (1)

வாயே மனமே வரையற்ற ஒருணர்வால்
நீயேநான் என்று நிலைமை அளித்தானே. (2)

தெய்வநீ ராடிச் சிவாலயங்கள் கைதொழுது
மெய்வருந்தா தப்பாநீ நானென்ற வேதியனே. (3)

கையில்விரல் தோயாமல் கண்சிமிட்டி நோகாமல்
ஐயமுளத் தாக்காமல் ஆண்டபரி பூரணனே. (4)

பட்டினி விட்டுப் பலநாள் வருந்தாமே
இட்டம் எனக்கும் உனக்குமென்ற ஈசுரனே. (5)

கோயில்வலம் வந்துபதக் கோகனகம் வாடாதே
நேயஅருள் வெள்ளம் நிறைவித்த ஆண்டகையோ. (6)

பேரா தரவாகப் பேரறிவு போதித்த
சீராசைச் சிற்றம் பலநாடித் தேசிகனே. (7)

நீயறிவு வானந்தம் நாமிதனை நீக்கியதே
காயவறி வென்றருளாற் காட்டும் கருணையனே. (8)

கண்ணொரு மூன்றும் கனற்கரமும் ஐம்முகமும்
மண்ணவர்க்கும் காணு வகையொளித்து வந்தானே. (9)

தர்க்கம் படித்துத் தலைவெடித்துக் கொள்ளுமதைக்
கற்கநினை யாதருளைக் காட்டும் கருணையனே. (10)

கைம்மாறு போதமறக் காசினியோர் நூலைவிட்டு
நம்மாணை சும்மா இருவென்ற நாயகமே. (11)

ஐம்மலமும் ஐந்தொழிலும் ஆன்மாவும் ஐயறிவும்
பொய்யலவே என்றிதனைப் போதித்த புண்ணியனே. (12)

போன வழியெல்லாம் போகா 'தொடியெறிந்து
தானவனுக் கும்பெருமை தந்த தவப்பயனே. (13)

பார்க்கிற் சுகமதுவாய்ப் பாரா விடிலுலகாய்
யார்க்கும் அளப்பரிய ஆனந்த வாரிதியோ. (14)

அஞ்சு மலத்தாலும் அழிவாய் இருந்தஎனை
அஞ்சுமலம் நீக்கி அழியாமல் வைத்தானே. (15)

பேதப் படுத்தல் பிராந்திதுவே மும்மலமும்
வேதப் பொருள்முடிவே நீயென்ற வேதியனே. (16)

சீர்புறவ வேலைத் திகழும் எனதுள்ளம்
ஊரதுவாய்க் கொண்டிருந்தே என்னை ஒழித்தானே. ((17)

சேர்வையாம் தொண்டரிடம் சேரும் பவக்கடலைப்
பார்வையான் மாற்றிப் பதியாக்கி வைத்தானே. (18)

பதிக்குப் பதியாய்ப் பரத்துக்கும் அப்பாலாய்
விதிக்கும் விதியாய் விதிக்கும் பெருமானே. (19)

தேவர் முனிவர் சித்தாந்தத் தோர்மறையோர்
மூவரவர்க் கப்பாலும் மூவா முழுமுதலோ. (20)

எங்கெங்கும் தானாகி என்போ லுருக்கொண்டு
மங்கும் பிறவிதனை மாற்றவந்த வள்ளலோ. (21)

தானை வணங்கத் தலையாம் பதம்கொடுக்கும்
வேளைநகர்ச் சிற்றம் பலநாடி வித்தகனே. (22)

காணற் கரியானே கண்முன் னுடையானே
தாணுவோ சங்கரனே சச்சிதா னந்தனே. (23)

மேலுக்கு மேலாய் விருப்பாய் வெறுப்பாகி
நூலுக்கும் காண்பரிய நுண்ணியனே ஐயாநீ. (24)

சொன்ன கமத்தும் சுருதிக்கும் எட்டாத
தன்னை தனமெனக்குத் தந்த தனிச்சுடரோ. (25)

ஆலயங்கள் தேடி அலையாதே உன்னிடத்தே
சாலவுநீங் காதிருப்போம் சத்தியமீ தென்றரோ. (26)

மானம் குலைந்து மதியழிந்து நான்கெட்டால்
நானென்று நீயென் றிரண்டில்லை என்றுரோ. (27)

பேறிழ வின்பம் பிணிமூப்புச் சாக்காடென்
றுறும் கருவில் அமைத்ததுனக் கென்றுரோ. (28)

சாதி மதத்தாலும் சமய மதத்தாலும்
கோதிலா ஞானத்தைக் கூடவரி தென்றுரோ. (29)

வேட்டுவன்வாய்ப் பட்டபுழு வேட்டுவனும் தன்மைபோல்
நாட்டநம்மேல் வைக்கிலை நற்சிவமே என்றுரோ. (30)

உரையும் உயிரும் உளமும் உணர்வும்
கரையிலன்றிப் போதத்தால் காணவரி தென்றுரோ. (31)

கண்டார்க்குக் கண்டதாய்க் காணார்க்குக் காணாதாய்க்
கொண்டார்க்குக் கொண்ட குறியாகி நின்றுரோ. (32)

அண்டாண்ட பூரணமாய் அப்பாலைக் கப்பாலாய்க்
கொண்டுமதிற் கொண்டறியாக் கொற்றவனைச் சொன்னார்.()

எல்லா உயிரும் எனதுருவே என்றுரைத்து
நல்லா ரினத்தில் நடித்தானைச் சொன்னார். (34)

கள்ள வழியெல்லாம் கமலவழித் தீமூட்டி
உள்ளம் அழுக்கறுத்த ஒண்பொருளைச் சொன்னார். (35)

முத்துயரும் மூவுயிரும் முப்பாழும் காட்டிஎனை
அத்துவிதம் ஆக்கும் அருளுருவைச் சொன்னார். (36)

ஆணாகிப் பெண்ணாய் அலியாய் அதல்லவாய்த்
தோணாத் துணையான சோதியனைச் சொன்னார். (37)

ஒப்பிலா ஞான உருவே உருவாகி
முப்புரத்தைச் சுட்டழித்த முக்கணனைச் சொன்னார். (38)

உண்டி உறக்கம் ஒழியாப் பிணிமூப்புக்
கொண்டு மகிழ்ந்த குணக்கடலைச் சொன்னார். (39)

மேலாம் திணைஇரண்டாய் மெய்யாய் உயிர்க்குயிராய்
நாலாம் பராபரமாம் நாயகனைச் சொன்னார். (40)

உள்ளம் கண்டவெல்லாம் ஒன்றாகி நின்றஒளி
உள்ளம் குதிகொண் டொருமுதலாய் நின்றுரோ. (41)

செய்வினைகள் எல்லாம் திருவினைகள் தாமாக்கி
உய்யஎனை ஆண்டருளும் உத்தமனைச் சொன்னாரார். (42)

வன்னம் புவனம்வரும் தத்துவ மாம்கலையென்
றுன்னுமிடம் என்னிடமென் றுற்றுரைச் சொன்னாரார். (43)

அண்டபிண்ட முள்ளம் அருளுருவே கோயிலெனக்
கொண்டொருவ ரும்அறியாக் கொற்றவனைச் சொன்னாரார். ()

இன்னவடி வின்னநிறம் இன்னபடி என்றறியா
துன்னும் இடத்தில் உதித்தானைச் சொன்னாரார். (45)

பார்த்தும் நினைத்தும் பரிசித்தும் பாவமறுத்
தேத்துநினை வைக்கொடுத்த எங்கோனைச் சொன்னாரார். (46)

சிந்தையிலுற் றார்க்கும் சிவலோக வீடளித்துப்
பந்தம் அகற்றும் பராபரனைச் சொன்னாரார். (47)

பேதாதி பேதமாய்ப் பேரறிவாம் ஒருரையே
ஆதாரம் ஆகுமென்ற அற்புதனைச் சொன்னாரார். (48)

மூன்றுவினை கண்டார்க்கு முற்றும் கெடஅகற்றித்
தோன்றுவினை மாற்றும் சுகோதயமே! கண்வளரீர். (49)

மெய்ஞ்ஞானக் கண்வளர மெய்கண்டான் மெய்வளர
அஞ்ஞானக் கண்ணகற்றும் ஐயர்! திருக் கண்வளரீர். (50)

சுத்தம் அசுத்தம் சுகமசுகம் ஆனந்தம்
நித்தம் அநித்தமென நின்றுரே! கண்வளரீர். (51)

முத்தொழிலாற் செய்த முறையுலகெ லாம்வளர
அத்தரே சீராசை ஐயரே! கண்வளரீர். (52)

வையம் வளர மறையோர் தொழில்வளர
மெய்யும் வளரஅருள் மேகமே! கண்வளரீர். (53)

சொல்லுக் கடங்காச் சுகாதீத மெய்ப்பொருளே
அல்லல் அறுத்தாண்ட ஆதியே! கண்வளரீர். (54)

இன்பம் இரண்டும் இயற்றியதற் கின்பமுமாய்
அன்பு நிறைந்த அருட்கடலே! கண்வளரீர். (55)

சமையத்தில் வீழாமல் தற்பரத்தில் ஆழாமல்
அமையக் கருணைதந்த ஆதியே! கண்வளரீர். (56)

சத்தி மலமைந்தும் தருவதுநாம் போக்குதல்நாம்
முத்தியும் நாமென்ற முழுமுதலே! கண்வளரீர். (57)

கீழுலகு முற்றும் கிளரொளியாய் நின்றபதம்
வாழவடி யேன்முன்னே வருந்த நடந்தாரோ. (58)

வேதாவும் மாலும் விளம்புதற்கும் எட்டாத
போதானந் தச்சொரூப புண்ணியன்நீ என்றாரோ. (59)

கண்ணாலும் காணாக் கருத்துக்கும் எட்டாதாய்
உண்ணாடில் உண்ணாடும் உத்தமரே! கண்வளரீர். (60)

ஓங்காரத் துள்ளொளியில் உள்ளே தனைக்காட்டி
நீங்காமல் தூங்கவைத்த நிட்களனார்! வாழியரோ. (61)

சித்தாந்தச் சித்த விகற்பது தீரவுடல்
முத்தனா மென்ற முழுமுதலே! கண்வளரீர். (62)

ஒன்றிரண்டு மூன்றற் றொருநாலோ டைந்தென்பர்
நின்றதெலாம் தானாகி நின்றாரே! கண்வளரீர். (63)

திருச்சிற்றம்பலம்.

சீகாழிச் சிற்றம்பல நாடிகள் தாலாட்டு முற்றிற்று.

---

ஸ்ரீ மெய்கண்டதேவர் மிளிர்கழல் வெல்க.

ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் மலரடி வாழ்க.

---

திருச்சிற்றம்பலம்

நீயுள்ள தென்றன்று நானுமுளன் அன்றுமுதல்
நீங்காமல் என்னிடத்தில்
நேசம்வைத் தேநீ யிருக்கநான் மலமாகி
நின்றதேது டலெனக் கங்
கேயுமுறை எங்ஙனே வினைகள்தரும் எனிலவைகள்
ஏறிடா தறுவிலாமல்
எட்டாத கேவலம இருப்பமேல் ஒருகன்மம்
ஏயா தவிச்சை கண்டு
காயம் தளிப்பதெனில் இன்புதுன் புறமுன்பு
கன்மம் ஏதிதனையருள்வாய்
ககனமுக டெங்கடங் தளவில்புவ னங்களும்
கரைபுரண் டெங்கும்ஓங்க
ஆயுமறை காணு தகண்டமாய் நின்றதிரு
அக்கினீ சுரர்மருவுநீள்
அருள்ஞான வாரியே! ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும்அரசே.

திருச்சிற்றம்பலம்

— ஸ்ரீ அகிலாண்டேசுவரி பதிகம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

# அநுபூதிவிளக்கம்

திருவாவடுதுறையாதீனம்
1954

5

திருச்சிற்றம்பலம்

உடலத்தில் இன்றெனக் கொழியாத இச்சைதான்
உற்றதே? தின்ற ஞலே
உற்றதேல் நீதநு அளித்திடும் போதெலாம்
உறல்வேண்டும் என்றன் இயல்பேல்
கடலொத்த பிறவிதனில் எந்நாளும் அவ்விச்சை
கட்டுற்று நிற்கவேண்டும்
கடியமல சத்திசற் றகலவரும் எனிலவை
கழித்ததார்? நீகழிக்கில்
கெடலுற்ற எல்லா வுயிர்க்கும்நீக் கிடுவையான்
கெடுத்தாலும் அம்மலந்தான்
கெட்டாலும் உனைவந்து கிட்டிவழி படுவதென்?
கேடிலாய்! இவையருளுவாய்
அடலுற்ற திரிபுரம் அடங்கலும் எரித்ததிரு
அக்கினி சுரனைமருவும்
அருள்ஞான வாரியே! ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும்அரசே.

திருச்சிற்றம்பலம்

—ஸ்ரீ அகிலாண்டேசுவரி பதிகம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிற்றம்பலநாடிகள் அநுபூதிவிளக்கம்

---

தேனிவரும் இன்பச் சிவானு பவமுரைக்க
ஆனை முகவன் அடிபணிந்து போற்றுவாம். (1)

சீராரும் கங்கைநகர்த் தேசிகர்கோன் மெய்கண்டான்
வாராதே வந்துரைத்த வார்த்தைவளம் கூறுவாம். (2)

தீராப் பவம்துடைத்த தேசிகர்கோன் மெய்கண்டான்
ஆரா வுரைத்த அநுபூதி கூறுவாம். (3)

குற்றமில் மெய்கண்டான் கூறும் சிவானுபவம்
சிற்றம் பலநாடி செப்பியவா செப்புவாம். (4)

தீதில் அருட்காழிச் சிற்றம் பலநாடி
வேதத் தலையுரைத்த மெய்ப்பொருளைக் கூறுவாம். (5)

சீகரமாம் காழிநகர்ச் சிற்றம் பலநாடி
ஆகமநூ லான அநுபூதி கூறுவாம். (6)

மாசார் பசுபாசம் மாசிலா வன்பதியென்
றுசான் விளக்கும் அநுபூதி கூறுவாம். (7)

பதிபசு பாசப் பரப்பறிந்து பார்க்கப்
பதிபசு பாசப் பரப்பா யிருந்ததே. (8)

சரியை முதற்கிரியை சங்கற்ப யோகத்
தொருமைதனில் நின்றருளும் உற்றஅநு பூதியிதே. (9)

கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவும்
தேட்டமறத் தேடும் சிவாநுபவம் செப்புவாம். (10)

அண்டபிண்டம் கண்டேன் அருங்கருவி கண்டிடிலென்
கண்டவுயிர் கண்டாலென் கலந்தவுயிர் காணுதார். (11)

மண்ணீ ரனல்கால்வான் வண்சுடர்கள் மன்னுயிர்கள்
தெண்ணீர்மை யான சிவனுருவே யல்லவோ. (12)

எட்டுருவம் என்றும் இறையுருவம் என்னுமது
சிட்டர் மறையும் சிவாகமமும் சொல்லியதே. (13)

ஆதலால் அண்ணல் அறிவு நினைவொழிந்திங்
கேதுநாம் வேறென் றியலுமது பாவியேன். (14)

எல்லாம் இறையுருவென் றிப்படியே காண்பதன்றி
நில்லா விடமென்று நீக்கினிலை கூடுமோ. (15)

சுருக்கம் விரித்தலறச் சோதி நிறைவிற்
பெருக்கவிழித் தாலலது பேரின்பம் கூடுமோ. (16)

எங்கே இறையையாம் எட்டுணையும் விட்டதுதான்
அங்கே அழுந்தில் அநுபூதி கூடுமோ. (17)

இந்திரியத் தோடே இயைந்த விடயத்தில்
அந்தரித்த போதும் அவனிடமே அல்லவோ. (18)

பற்றும் மனுதியுடன் பற்றிப் பயின்றாலும்
உற்ற விடமெந்தை உணர்வுருவே யல்லவோ. (19)

ஆசை அறிவியற்றல் ஆனவிட மெல்லாம்நம்
ஈசனிடம் அல்லா தெமக்கோ ரிடமிலையே. (20)

சென்ற இடமெல்லாம் சிவமென்றல் மானதமோ
சென்றவுயிர் நின்ற சிவனுருவில் அல்லவோ. (21)

இன்றே இறையுயிருக் கிப்படியே நின்றநிலை
ஒன்று ஒழியா ஒருவன் உறவெமக்கே. (22)

நினைப்பும் மறப்புமிந்த நின்மலனை அல்லால்
தினைத்துணையும் இல்லையென்று தெய்வமறை கூறியதே. (23)

இனியகல்வ தெங்கே இருவினையால் எங்கும்
தனியகல நின்றருளும் தம்பிரான் தானலவோ. (24)

வெறுப்பு விருப்பென்று வேறுரைத்தால் எந்தை
உறுப்பிற் குறையாதோ உணர்வுடையார் சொல்லுவரோ. (25)

வேண்டலும்வேண் டாமையுமாம் வினையும் வினைப்பயனும்
ஆண்டகையோ டுற்ற அநுபூதி யானதுவே. (26)

பாசப் பரப்பும் பசுவும் பராபரையும்
ஈசனலா தொன்றும் இனிப்பிறக்க வில்லையே. (27)

ஈண்ட அளம்புக் கிலவணமே யானதுபோல்
பூண்ட உயிரெல்லாம் பொருளா யிருந்ததே. (28)

எரிசுத்தம் கொண்ட இரும்புபோல் எங்கும்
பரிசுத்த மான பராபரமே யானதே. (29)

போதையார் தாளிணைகள் புன்தலைமேல் வைப்பளவில்
வேதையாய் எங்கும் விமனரு ளானதே. (30)

பார்த்தேன் உலகப் பரப்பெல்லாம் பார்ப்பளவில்
பேய்த்தேர்போல் இல்லையாய்ப் பேரறிவு கண்டோமே. (31)

பொய்யெங்கே மெய்யெங்கே போதம் பொறியெங்கே
மையெங்கே எங்கும் மலர்ந்த சுகமொழிந்தே. (32)

மண்முதலாம் பூத வகுப்படைய என்னறிவோ
அண்ணல் அருளோ அடங்க விழுங்கியதே. (33)

எண்ணரிய பூதமெல்லாம் என்னுடைய தம்பிரான்
கண்ணில் அடங்கியிடக் காணவரி தானதே. (34)

வானடையா துற்றவிருள் வானொளித்த நேரம்போல்
ஆன பரமசுகம் அல்லா தடங்கிற்றே. (35)

அந்தகர்கட் கிந்த அவனி யொளித்ததுபோல்
வந்தவருட் கேவலத்தில் வையம் ஒளித்ததுவே. (36)

என்றும் குருடன் இருள்தீர்ந் திரவிவர
நின்ற நிலைபோல நிறைவொழிந்து கண்டிலமே. (37)

அன்றே இறைக்கடிமை ஐயமில்லை ஐயமில்லை
என்றே மறைமொழிதற் கின்றே இசைந்தனமே. (38)

சேரச் சிவமாகச் சிந்தித்தார் சிந்தித்தார்
பூரணத்தி னுள்ளே பொருந்தினவர் அல்லவோ. (39)

விட்டுவிடு மேதினியில் வேறு பொருள்கோடல்
கிட்டினவர் ஆனந்தக் கேள்வர்நமக் கல்லவோ. (40)

பத்துத் திசையும் பதினா லுலகமெங்கும்
தத்திக் கரைபுரளும் சாகரமே அல்லவோ. (41)

இந்திர சாலம் இடுமளவும் மெய்யாகி
அந்தரப்பூ ஆனதுபோல் அவனிநமக் கானதுவே. (42)

பொய்த்திரிவும் இந்தப் புவியென் றுணர்வளவின்
மெய்த்திரிவு தீர வெளியாய் இருந்ததே. (43)

அச்சமறுத் தெல்லாம் அருளாகித் தந்தருளி
வைச்சவருள் ஆனந்த வாரிதியில் ஆறினமே. (44)

ஓத லுடனென்றும் உணர்தல் இனியமையும்
ஏதும் கருதாமை ஏகாந்த மாய்விடுமே. (45)

செய்தவங்க ளாலென்றன் தேசிகனுர் வந்தருள
எய்துமின்பம் போதும் இனித்தவங்கள் வேணுமோ. (46)

பருவம் குறித்துப் பரம ஒளிவந்திவ்
உருவம் தரித்தால் ஒருதவந்தான் வேணுமோ. (47)

செய்தற் கரியதவம் செய்ததற்பின் அல்லவோ
எய்தற் கரியபிரான் என்போல வந்ததுவே. (48)

பார்த்தும் பரிசித்தும் பாதுகைகள் சூடிஎன்றும்
ஏத்துகுரு நாதர்தம்மை இன்புருவம் ஈதென்றே. (49)

கச்சி நகரிலன்று கம்பர்தமைக் காரிகையாள்
இச்சித்துப் பூசித்தாள் எடுத்ததிரு மேனியன்றோ. (50)

அருளா வடுதுறையில் ஆவுருவாய் அம்மை
இருள்தீரப் பூசித்தாள் எடுத்ததிரு மேனியன்றோ. (51)

கண்ணனிரு கண்ணிடந்தும் கண்ணப்பர் கண்ணிடந்தும்
எண்ணமறப் பூசித்தார் எடுத்ததிரு மேனியன்றோ. (52)

கந்தன் கணபதியும் கற்ற இருடிகளும்
எந்தையெனப் பூசித்தார் எடுத்ததிரு மேனியன்றோ. (53)

வேதனுடன் இந்திரனும் மேம்பட்ட தேவர்களும்
ஏதமறப் பூசித்தார் எடுத்ததிரு மேனியன்றோ. (54)

கொண்டவடி வெல்லாம் குருவடிவே என்றென்று
தொண்டர்பலர் பூசித்தார் சொல்ல முடியாதே. (55)

எவ்வடிவும் இந்த இறைவடிவே ஆதலினல்
இவ்வடிவு பூசிக்க யாமுரைக்க வேணுமே. (56)

சீருருவம் கொண்டருளும் தேசிகன்செம் மேனிபோல்
ஓருருவில் நின்றிங் குணரா துணர்த்தினனே. (57)

வந்த குருவடிவை வந்தித்துப் பூசித்துத்
தந்த சிவாநுபவம் தானருந்தப் பெற்றனமே. (58)

அருந்த அருந்த அமையா தமுதம்
தருந்தமியைப் பாவியேன் தானுகக் கொள்ளுவதே. (59)

ஆயவிய மில்லா அகண்டபரி பூரணத்தே
தூய குருவுருவம் தோன்ருமல் தோன்றியதே. (60)

தாய்முலைவாய் வைத்திரக்கத் தன்னியம்வந் தூறுவபோல்
தூயதுணைத் தாளழுந்தத் துய்யசுகம் தோன்றிடுமே. (61)

தோன்ருமை தோன்றிச் சுகமே சுகமாகித்
தோன்ருமை தோன்றியதில் தோய்ந்து துளைந்தனமே. (62)

சைவப் பெருமான் தவராச ராசனும்
பையவரு மெய்கண்டான் பாதமலர் வாழியதே. (63)

தங்கைநகர் மெய்கண்டான் தாற்கமலம் சென்னியின்மேல்
தங்கஇருள் நீங்கிஅருள் தானும் தபோதனரே. (64)

வாழி திருநீறு வாழிதிரு அஞ்செழுத்து
வாழி சிவாலயங்கள் வாழிதிரு வேடமுமே. (65)

திருச்சிற்றம்பலம்.

சீகாழிச் சிற்றம்பலநாடிகள் அநுபூதி விளக்கம் முற்றிற்று.

---

ஸ்ரீ மெய்கண்ட தேவர் மிளிர்கழல் வெல்க.
ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் மலரடி வாழ்க.

---

திருச்சிற்றம்பலம்

பண்டைவினை யாலும்வரு பழவினையி னாலும்உறு
பாழ்த்தகன் மத்தினாலும்
பாழான மாயைப் புணர்ச்சியா லும்தொலைவில்
பலபல தநுக்கள்தூக்கிக்
கொண்டுசுழல் பாவியேன் செய்கின்ற பிழையெலாம்
குணமெனக் கருதிஎளிதாக்
கோலங்கள் காட்டிஎனை இவ்வள வெடுத்தாண்ட
குணமேரு வே! நிறைந்து
மண்டும்ஆ னந்தவெள் ளத்தையுண் டின்புறவும்
வைப்பதென் றோ! அறிகிலேன்
வானாகி மண்ணாகி மற்றுளவெ லாம்ஆகி
மறைநான்கும் அறியாமலே
அண்டபகி ரண்டப் பரப்புமாய் அப்புறமும்
அளவற்று நின்றுலாவும்
அருள்ஞான வாரியே! ரசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே.

திருச்சிற்றம்பலம்

— ஸ்ரீ அகிலாண்டேசுவரி பதிகம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

# வருகாலத்திரங்கல்

திருவாவடுதுறையாதீனம்
1954

6

திருச்சிற்றம்பலம்

புசிப்பினால் வினையாற் சகலனா மென்பாற்
புசிப்பொடு வினையுமாய்ப் புகுந்து
புல்லிய வரவின் வாய்மணி கொள்வார்
போன்மலத் தனைவெளிப் படுத்தி
நசிப்பிலாக் கருணை யுருவமாய் வந்து
ஞானபா தத்தையீ ரைந்தா
கண்ணுகா ரியத்தா லெனக்குப தேச
நல்குநின் பெருமையா னறியேன்
வசிக்குமைந் தொழிலின் மலநடை நான்காய்
மற்றொரு தொழிலரு ளுடையாய்
மன்னுயிர்க் கிரங்கி நடத்தொழில் புரியும்
வள்ளலே! மருவுசித் திடத்தும்
அசித்தினு நீங்கா தகண்டமாய் நிறைந்த
வருட்பரி பூரணக் கடலே!
ஆவடு துறைசை யம்பல வாணா!
வடியவர்க் கருளுமா நிதியே.

திருச்சிற்றம்பலம்

—உலகுடைய நாயனார்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிற்றம்பலநாடிகள் வருகாலத்திரங்கல்

---

தோன்றி மறையுமிந்தத் தொல்லுலகு தோன்ருமல்
ஆன்ற அறிவுநாம் ஆய்விடுவ தெக்காலம். (1)

ஆரணன்மால் காணு அறிவாய் அகண்டமுமாம்
பூரணத்துக் குள்ளே புகுவதினி யெக்காலம். (2)

கனவு நனவென்று காணுமல் மெய்யில்
இனவு கனவற் றிருப்பதினி யெக்காலம். (3)

வேதன்மால் காணுத வேறற்ற வீட்டின்பப்
போதமால் கொண்டு புரையறுவ தெக்காலம். (4)

காண்கின்ற தெல்லாம் கலந்த சுகமாகப்
பூண்கின்ற போதப் புரையறுவ தெக்காலம். (5)

ஒன்றுபட நின்ற உணர்வே உணர்வாகி
நின்றபடி நின்று நினைவழிவ தெக்காலம். (6)

ஆரா வமுதம் அமையா தருந்தியதில்
பேராமல் நிற்கப் பெறுவதினி யெக்காலம். (7)

ஓரொருகால் வாதனையில் உற்றழுந்தல் விட்டறிவிற்
பூரணமேற் கொண்டு பொருந்துவதும் எக்காலம். (8)

காண்பானும் காட்டுவதும் காண்பதுவு மாய்நிற்கும்
வீண்பாவம் தீர விளைவதினி யெக்காலம். (9)

அருவும் உருவும் அருவுருவு மான
உரிமை ஒழிந்திடத்தில் உறுவதுவும் எக்காலம். (10)

நீங்காத பேரறிவில் நீங்காமல் ஒன்றுபட்டே
ஆங்காரம் தீர அடங்குவதும் எக்காலம். (11)

அந்த அறிவகன்றே ஆனந்த மாலேறித்
தொந்தப் பவத்தில் துரிசறுவ தெக்காலம். (12)

கேட்டுரைத்தல் அன்றியே கேளாமல் அன்றியே
வீட்டிலொரு தன்மை விளைவதினி யெக்காலம். (13)

சொல்லரிய இன்பச் சுகமே சுகமாக
எல்லையற ஒன்றாய் இருப்பதினி எக்காலம். (14)

தாயுதரம் புக்க தடுமாற்றம் தீருவதற்
காயும் அறிவில் அழுந்துவதும் எக்காலம். (15)

இந்நாள் நிரையத் திருந்த துயர்தீர
உன்னு ஒளியில் ஒளிப்பதினி யெக்காலம். (16)

ஆக்கம் அளவற்ற அறிவே அறிவாகி
நீக்கமற நின்று நிலையழிவ தெக்காலம். (17)

அஞ்செழுத்தும் வெண்ணீறும் அன்பர்திரு வேடமும்என்
நெஞ்சழுத்த மாக நிலைபெறுவ தெக்காலம். (18)

அண்ணல்திருக் கோயிற் கடிமைத் திறமல்லா
தெண்ணும் கருமம் இழிவதினி யெக்காலம். (19)

வேறு.

தூக்கற்ற சோதியினுள்ளே சொல்லறநின்று சுகத்தே
நீக்கற் றிருப்பதெந்நாளே நித்தத் திருப்ப தெந்நாளே. (20)

ஒருணர் வான உணர்வுக்குள் உணர்வாக உணர்ந்தே
பார்முதல் நாதம்ஒழியப் பண்பற்றிருப்ப தெந்நாளே. (21)

ஆரணன் வேதம் அறியா அண்ணல் நிறைவே நிறைவாய்ப்
பூரணனார் நிறைவாயே போதத்தில்நிற்ப தெந்நாளே. (22)

கண்டதுகண் டதுகண்டே விண்டதுவிண் டதுவிண்டே
கொண்டதுகொண் டதுகொண்டே கொள்கையிறப்பதெந்நாளே

கூடுதல் வாடுத லின்றே கூடுணர் வொன்றென நின்றே
ஆடுதல் பாடுத லாயே ஆய்விடு நாளினி யேதோ. (24)

வேறு.

என்றும் எனைப்பிரியா எம்பிரான் தன்நிறைவில்
ஒன்று படநின்றே உணர்வழிவ தில்லையோ. (25)

ஆண்ட குருபதத்துக் காட்சிசெய்வ தல்லாது
பூண்ட புலன்வழியைப் போக்குநாள் இல்லையோ. (26)

கண்ட உடம்பெல்லாம் காணுமல் ஆருயிர்கள்
கண்டறிவைக் கண்டதனில் கைகலக்கும் நாளேதோ. (27)

சற்றும் தணவாத தம்பிரான் என்றறியாக்
குற்றம் தணிப்பதற்குக் கூறியிடும் நாளேதோ. (28)

இன்றளவும் எந்தை இணையடியிற் செல்லாமை
நின்றதுயர் தீர நின்றுவிடும் நாளேதோ. (29)

பொல்லாத பூதப் புலாலுடம்பிற் கூடாமற்
கல்லாத அன்பில் கலந்திருக்கும் நாளேதோ. (30)

பொய்த்தத் துவத்தின் துவக்கறுத்துப் போற்றரிய
மெய்த்தத் துவத்தில் விழித்துவிடும் நாளேதோ. (31)

ஐயோ விதியே ஐவரும் தாம்தொலைய
மெய்யே விழித்து விரவியிடும் நாளேதோ. (32)

பொல்லாத நெஞ்சும் பொருளின்மேல் ஆசைகளும்
எல்லாம் தவிர இருந்துவிடும் நாளேதோ. (33)

கூறரிய மெய்ஞ்ஞானம் கொண்டபடி கொண்டதன்றி
ஆறி யிருந்தங் கலப்பிக்கும் நாளேதோ. (34)

மாயப் பிறப்பில் வருந்தும் மயக்கமறத்
தூய அருட்பரப்பில் தோய்ந்துவிடும் நாளேதோ. (35)

பரிபூ ரணம்தன்னில் பாலமுதம் உண்டே
இரவுபகல் தேசிகரை ஏத்தியிடும் நாளேதோ. (36)

குன்றுத ஞானக் குருபரனுர் சொற்கேட்டுப்
பொன்றுத வாதனையைப் பொன்றியிடும் நாளேதோ. (37)

ஊனமிலா இன்ப உருவே உருவாகி
யானெனது நீங்கி இருந்துவிடும் நாளேதோ. (38)

பேருக வந்தருளும் தேசிகற்குப் பின்வந்து
மாரு மனத்துயரம் மாற்றியிடும் நாளேதோ. (39)

என்றும் குருநாதர் இட்டபணி செய்துமிக
நின்றபடி நில்லாத நெஞ்சுவிடும் நாளேதோ (40)

ஆசையெல்லாம் அற்ற அறிவே அறிவாகி
ஈசனெல்லா மாகி இருந்துவிடும் நாளேதோ. (41)

அவனை அவளை அதுவைக் கருதிச்
சிவனை மறந்திருக்கும் சிந்தைவிடும் நாளேதோ. (42)

தீதிலா இன்பச் சிவமே சிவமான
போதெல்லாம் காணப் புலப்படுவ தெக்காலம். (43)

காணரிய ஞானக் கடலே இடமாகத்
தாணுவே! தேசிகனே! தந்தருள வேணுமே. (44)

முன்புவினை எப்போதும் முட்டா தருந்துவபோல்
அன்புடனே இன்பம் அருந்துதற்கு நாளேதோ. (45)

வேறு நினையாமல் வீட்டின்பத் தின்புற்றே
ஆறி யிருந்தருந்த அண்ணலே! தந்தருளே. (46)

ஒத்தொவ்வா இந்த உலகை மறந்துணர்வில்
நித்தமாய் நின்றுவிட நின்மலனே! தந்தருளே. (47)

அவயோகம் தன்னில் ஆசையற என்றும்
சிவயோகத் தானந்தம் தேசிகனே! தந்தருளே. (48)

சத்திய ஞானமனந் தானந்தம் தானாகி
நித்தமாய் நின்றுவிட நின்மலனே! தந்தருளே. (49)

திருச்சிற்றம்பலம்.

சீகாழிச் சிற்றம்பலநாடிகள் வருகாலத்திரங்கல் முற்றிற்று.

---

ஸ்ரீ மெய்கண்ட தேவர் மிளிர்கழல் வெல்க.

ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் மலரடி வாழ்க.

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

# நிகழ்காலத்திரங்கல்

திருவாவடுதுறையாதீனம்

1954

திருச்சிற்றம்பலம்

*சீவனே வியாபி யவத்தையி னிழிந்து*
*திரும்புதல் குற்றமாங் கருவி*
*சேருதல் பிரித லில்லையா முறையிற்*
*செயற்படுங் கருவியே தெரியுந்*
*தாவிலா வறிவு தங்கின விடமே*
*தகுமுயிர்க் கிருப்பிட மென்று*
*சாற்றியென் னுளத்தி லையமுந் திரிவுந்*
*தவிர்த்தெனை யாண்கொண் டனையே*
*பாவனை கடந்த வுனைவச மாக்கப்*
*பாசமும் பசுவுமா ஞானம்*
*பற்றிநாட் டத்தை முகிழ்த்துவாய் நீரைப்*
*பசையறப் பருகுவார் தங்கள்*
*ஆவல்சேர் நிட்டை யபாயமாய்க் கருதி*
*யதற்கியல் பினையளித் தவனே !*
*ஆவடு துறைசை யம்பல வாணா !*
*வடியவர்க் கருளுமா நிதியே.*

திருச்சிற்றம்பலம்

—உலகுடைய நாயனார்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சீகாழிச் சிற்றம்பலநாடிகள் நிகழ்காலத்திரங்கல்.

---

உன்னரிய ஞானம் உருவாக வந்தருள
என்னதவம் செய்தோமுன் னியாமென் றறிந்திலமே. (1)

ஆண்டருள வேணுமெனும் ஆசையோ நல்லறமோ
வேண்டி எமையாள மெய்கண்டார் வந்ததுவே. (2)

கீழ்ச்செய் தவத்தால் கிழியீடு நேர்பட்டு
மீட்சி தரஎமக்கு மெய்கண்டார் வந்ததுவே. (3)

வாரீர் சிவனடியார் வாராமல் வந்தவரைப்
பாரீர் பரத்தின் பரிணமம் தன்னையுமே. (4)

இப்படியே இப்படியில் என்போல் இருப்பதுவே
அப்படியே அந்த அகண்டபரி பூரணமே. (5)

பேராத இன்பப் பெருமான் உருக்கொண்டு
வாராமல் வந்துதிரு வார்த்தை உரைப்பதுவே. (6)

கல்லால் நிழலிருந்து கைம்மலரால் நால்வருக்குச்
சொல்லாத சொல்லதனைச் சொல்லுதற்கு வந்தவா. (7)

அறுபத்து மூவர்க்கும் அன்றன்று வந்தார்
உறுமுத்தி சேர்வார்கட் கோருருவாய் வந்தவா. (8)

சீரார் மறையும் சிவாகமமும் செய்நூலும்
ஓரா உணர்வும் ஒருமொழியாய்த் தந்தவா. (9)

அரிபிரமர் காணாத ஆநந்தத் தேனைப்
பருகிப்பரு காதருந்தப் பான்மொழியாய்த் தந்தவா. (10)

தோன்றும் பொழுதெல்லாம் சுகவடிவே தோன்றுதற்குத்
தோன்றும் பெருமாள்தம் சொல்லாலே சொன்னவா. (11)

பஞ்சமலம் தீர்ந்த பரம சுகம்தன்னைக்
கிஞ்சுகவா யாலே கேளென்று சொன்னவா. (12)

போதளவு காணமல் புல்கு சுகம்தன்னைச்
சீதளவா யாலே தெளிவதற்குச் செப்பியவா. (13)

நாயின் கழுத்தினுக்கு நல்லாரம் வாய்த்ததுபோல்
தீயவினை யேனருந்தத் தெள்ளமுதம் தந்தவா. (14)

வேதன்மால் காணுத மெய்கண்ட நாதனுர்
பாதம்நாம் காணப் படிமிசையில் வந்தவா. (15)

மெய்கண்ட நாதனுர் மேதினிமேல் வந்தருளக்
கைகண்டோம் வீட்டின்பம் காட்சி அறக்கலந்தே. (16)

தீராத பொய்யவித்தை தீருமாம் தீர்ந்ததற்பின்
ஓரா வுணர்வுடம்பாய் ஒன்றுபட நின்றவா. (17)

குருவொழிந்து தெய்வம் குவலயத்திற் கொள்ளார்
இருவர் அறியாத இறைநிறைவில் ஏய்ந்தவா. (18)

காணீர் திருமேனி கண்ணுரக் கண்குளிரப்
பேணீர் அவர்பதத்தைப் பேசீர் அவர்புகழே. (19)

அண்டம் கடந்த அறிவுருவைப் பாருங்கோள்
தொண்டர் புடைசூழ்ந்த சோதிதனைப் பாருங்கோள். (20)

ஆனந்த நாடன் அருள்மேனி பாருங்கோள்
தேனுந்து வாயாரச் செப்புதலைக் கேளுங்கோள். (21)

எண்ணுத இன்ப இறையுருவைப் பாருங்கோள்
கண்ணுல் வினைதீர்த்த காரணரைப் பாருங்கோள். (22)

வாக்கிறந்த இன்ப வடிவதனைப் பாருங்கோள்
நோக்கரிய நோக்குடைய நுண்ணியரைப் பாருங்கோள் (23)

திருமால் அயன்அறியாத் தேசிகரைப் பாரும்
கருமால் ஒழித்தாண்ட காற்கமலம் பாருமே. (24)

செய்தற் கரியதவம் செய்தாலும் தேவர்கட்கும்
எய்தற் கரியபிரான் எய்தியவா பாருமே. (25)

தீரா மலங்கெடுத்த சிற்பரரைக் காணுங்கோள்
வாரா வழிஅருள வந்தவரைக் பாருங்கோள் (26)

பிறவா நெறிகாட்டும் பிஞ்ஞகரைக் காணும்
மறவாத பேரின்பம் வைத்தவரைக் காணுமே. (27)

மண்ணிற் பிறந்து வருந்தாமை வான்கருணைக்
கண்ணிற் பணிவித்த காரணரைக் காணுமே. (28)

வேறு

அல்லல் அறுத்தமை பாரீர் அண்ணல் இருந்தமை பாரீர்
சொல்லை விடுத்தமை பாரீர் சோதி எறித்தமை பாரீர். (29)

மாயை கழன்றமை பாரீர் வல்வினை விட்டமை பாரீர்
தூய அறிவரைப் பாரீர் தோன்றுத் துணைவரைப் பாரீர். (30)

என்னை அளித்தமை பாரீர் என்னுள் இருந்தமை பாரீர்
தன்னை அளித்தமை பாரீர் தகைவற நின்றமை பாரீர். (31)

பூதம் களைந்தமை பாரீர் பொய்யுரை மாண்டமை பாரீர்
நாதம் ஒழிந்தமை பாரீர் நாமற நின்றமை பாரீர். (32)

ஆசை அகன்றமை பாரீர் ஆணவம் விட்டமை பாரீர்
தேசு நிறைந்தமை பாரீர் தேசிகர் தேசரைப் பாரீர். (33)

வாதனை போனமை பாரீர் வாழ்வுபொய் யானமை பாரீர்
பேதைமை போனமை பாரீர் பேதகம் போனது பாரீர். (34)

உருவம் இறந்தமை பாரீர் உணர்வள வானமை பாரீர்
அருவம் இறந்தமை பாரீர் ஆனந்தம் ஆனமை பாரீர். (35)

போதம் இறந்தமை பாரீர் பூரணம் ஆனமை பாரீர்
வேத முடிவரைப் பாரீர் மெய்கண்ட நாதரைப் பாரீர். (36)

ஆகம சீலரைப் பாரீர் அம்பல வாணரைப் பாரீர்
ஏகன் அனேகனைப் பாரீர் இன்ப உருவனைப் பாரீர். (37)

அறிவுக் கறிவனைப் பாரீர் அறிவுக் கதீதனைப் பாரீர்
செறிகைக் கினியனைப் பாரீர் தேசிகர் தேவனைப் பாரீர். (38)

சேரப் படைத்தமை பாரீர் சேர அளித்தமை பாரீர்
சேரத் துடைத்தமை பாரீர் செய்யாச் செயலனைப் பாரீர். (39)

உள்ளும் புறம்பனைப் பாரீர் ஒருதன்மை யாளனைப் பாரீர்
தெள்ளத் தெளிவனைப் பாரீர் தேறலில் தேறலைப் பாரீர். (40)

சுட்ட இருந்தமை பாரீர் சுட்டற நின்றமை பாரீர்
கிட்ட எளியனைப் பாரீர் கேளிரில் கேளனைப் பாரீர். (41)

கருணை உருவனைப் பாரீர் கண்ணரு ளாளனைப் பாரீர்
இருள்மலம் அற்றமை பாரீர் இன்புற் றிருந்தமை பாரீர். (42)

எல்லாம்பொய் ஆனமை பாரீர் இன்பமெய் யானமை பாரீர்
சொல்லாத சொல்லனைப் பாரீர் சொல்லற்ற சோதியைப்பாரீர். ()

சிவமொளிந் தற்றமை பாரீர் சேர்ந்து கலந்தமை பாரீர்
நவமொழிந் தற்றமை பாரீர் நாமவ ரானமை பாரீர். (44)

வேறு

இப்போது கண்ட இறையறிவும் என்னுயிருக்
கப்போதும் ஆதாரம் ஆகியவா கண்டனமே. (45)

செப்பரிய உண்மைச் சிவஞான தேசிகராய்
இப்படியே வந்திங் கிருந்த ததிசயமே. (46)

தேன்தரும் ஆனந்தச் செங்கமலத் தாள்அருள
மானிடர்போல் மண்ணின்மிசை வந்த ததிசயமே. (47)

என்றும் அருவுருவாய் எங்கும் நிறைந்தவர்தாம்
இன்றெமக்குத் தேசிகராய் ஏய்ந்த ததிசயமே. (48)

போக்குவர வற்றிருக்கும் பூரணர்தாம் மண்மிசையில்
யாக்கை யுடன்வந்த தறவும் அதிசயமே. (49)

எங்கும் நிறைந்தவர்தாம் ஏக உருவாகிச்
செங்கமலத் தாள்வழங்கச் சேர்ந்த ததிசயமே. (50)

திருச்சிற்றம்பலம்

சீகாழிச் சிற்றம்பலநாடி நிகழ்காலத்திரங்கல் முற்றிற்று.

---

ஸ்ரீ மெய்கண்ட தேவர் மிளிர்கழல் வெல்க.

ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் மலரடி வாழ்க.

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

# கலிகாலத்திரங்கல்

திருவாவடுதுறையாதீனம்
1954

திருச்சிற்றம்பலம்

காந்தமுன் கரும்பொன் கதிரின்முன் படிகங்
ககனநேத் திரவொளி தாரை
கலைமதி பொருந்துந் தன்மையா யுனது
கருணையி னுள்ளுறக் கலந்து
மாந்திய கனியு மதுரமும் பண்ணு
மருவுறு மோசையு முடலும்
மன்னிய வுயிரும் போலமுன் றில்லா
வகையிரண் டல்லது மானேன்
எய்ந்தமுன் றவத்தை யுயிரினுக் காதி
யிருக்கினும் வினைமுதிர்ச் சியினால்
இரண்டுமுன் னடாத்தி மலபரி பாக
மியற்றிமற் றொன்றையீ ரைந்தாய்
ஆய்ந்தகா ரியமா வவத்தையோ ரைந்தி
னடக்கினா னறிந்திடச் செய்த
ஆவடு துறைசை யம்பல வாணா !
வடியவர்க் கருளுமா நிதியே.

திருச்சிற்றம்பலம்

—உலகுடைய நாயனார்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிற்றம்பலநாடிகள் கழிகாலத்திரங்கல்

சீரார் திருநீறும் தீதிலருள் வேடமும்முன்
சேராமல் ஐயோ! தெளியா திருந்தனமே. (1)

வந்து பிறந்திந்த மானிடராய் மண்மிசையில்
எந்தைபணி செய்வதற்கென் றெண்ணு திருந்தனமே. (2)

திருக்கோயில் சூழ்ந்து சிவனுருவம் கண்டு
மருட்கோல மாற்றுமல் மாண்டு திரிந்தனமே. (3)

மஞ்சனமும் மாமலரும் மாருத் திருவிளக்கும்
செஞ்சடையோற் கென்றென்றும் செய்யா திருந்தனமே. (4)

சமைய விசேடம் அவுத்திரிமுன் கொள்ளா
தமைவில் விடயத் தழிந்து திரிந்தனமே. (5)

அன்றே சிவனுரை ஆதரவாய்ப் பூசித்தல்
இன்றே வினைப்பிறப்பில் ஈடழிந்து விட்டனமே. (6)

ஆதார யோகம் நிராதார யோகமெனும்
சூதானம் இல்லாமல் சூழ்ந்து பிறந்தனமே. (7)

ஊனொழித்திட் டென்றும் ஒழியாத வீடுதரும்
ஞானகுரு வேணுமென்று நாடா திருந்தனமே. (8)

அருவாகி நின்ற அரனுர் உலகில்
குருவாய் இருத்தல் குறியா திருந்தனமே. (9)

தேசுற்ற தேசிகரைச் சிந்தை மகிழ்ந்துருகிப்
பூசித்துப் போற்றுமல் போதவமே போக்கினமே. (10)

மாருத மாக்கருணை மானிடர்போல் வந்திருக்கப்
பேருகப் போற்றுமல் பேறழிந்து விட்டனமே. (11)

இன்றுபோல் அன்றே இறைவனூர் கண்மலரால்
நின்றுவினை போக்காமல் நிட்டூரம் செய்தனமே. (12)

அங்கமலத் தாள்இரண்டும் அன்றே தலைக்கொண்டு
பொங்குமலம் போக்காமல் புலன்வழியே போக்கினமே. (13)

பூத உடலம் பொருளல்ல என்றுணர்ந்த
போதம் தனைமுன்னே பொருந்தியிடப் பெற்றிலமே. (14)

மனுதிமுதல் வாயு மறந்திருந்த வாழ்வை
அனுதியே காணு தவமே யுழன்றனமே. (15)

ஒன்றும் பொறிபுலனை ஓயா திருந்தஇன்பம்
அன்றருந்த எல்லாம் அகன்றிருக்கப் பெற்றிலமே. (16)

ஆணவத்தை நீக்கி அறிவில் விழித்ததனைக்
காணவைத்த அன்றுமுதல் காணு தலந்தனமே. (17)

என்னறிவு கண்டிங் கிருள்தீர்ந்த இவ்விழிப்பு
முன்னம்அறி யாதலந்தேன் மூர்க்கனேன் அல்லவோ. (18)

அறிவுக் கறிவாகி ஆதார மாகிப்
பிறிகைக் கரிதாம்பே றிந்நெடுநாள் பெற்றிலமே. (19)

பார்க்க அரிதாம் பரஅறிவின் தன்பெருமை
ஏற்கவே கண்டுகண் டின்புற் றிருந்திலமே. (20)

எல்லா அறிவும் இழந்தஇடத் துள்ளஇன்பம்
அல்லாத பாவியேன் அன்றே அறிந்திலனே. (21)

வானுந்து தேவறியா மாமலர்த்தாள் வாழ்த்தியன்றே
ஆனந்தத் தேனை அருந்துதற்குப் பெற்றிலமே. (22)

உள்ளும் புறம்பும் ஒழியாத ஆனந்த
வெள்ளத் தழுந்தாமல் வீண்நெடுநாள் விட்டனமே. (23)

சீரார் சிவானந்தத் தேனருந்தி வாழ்வதற்குத்
தேராமல் இந்நெடுநாள் தீவினையில் மூளுவதே. (24)

எண்ணரிய பேரின்பம் இப்போது போலமுன்னும்
நண்ணி அருந்தாமல் நாளவமே போக்கினமே. (25)

கண்டஇட மெல்லாம் கலந்த பரமசுகம்
கொண்டிருந்து வாழாநாள் கொன்னே கழிந்தனமே. (26)

எல்லாமாம் முத்தியில்நின் றென்னைமே லிட்டசுகம்
நில்லாமல் இந்நெடுநாள் நில்லாமல் நின்றனமே. (27)

சேரச் சிவமாம் தெளிவும் தெளிந்தஇந்த
நேரம்போல் முன்னாளும் நின்றுவிடப் பெற்றிலமே. (28)

நில்லாத தெல்லாம் நிலையென்று நெஞ்சில்வைத்துச்
சொல்லாத பேரறிவு சொல்லாடப் பெற்றிலமே. (29)

ஆகாப் பொருள்தேடி ஆம்பொருளைக் கைவிட்டுப்
போகா உடல்தோறும் புக்குழன்று விட்டனமே. (30)

முத்திநெறி நில்லாத மூர்க்க ருடன்கூடி
அத்தனடி யாரடியை ஆதரிக்கப் பெற்றிலமே. (31)

ஈன்றாள் முதலாக எவ்வுறவும் போற்றிசெய்து
சான்றோர் திருவடியைச் சார்வதற்குப் பெற்றிலமே. (32)

நெஞ்சழுத்த மாகவே நிட்டூரம் பேசிமிக
அஞ்செழுத்தும் வெண்ணீறும் ஆதரிக்கப் பெற்றிலமே. (33)

புரையுடைய சிந்தைப் புலைய ருடன்கூடி
அரனடியார் கூட்டம் அணுகுதற்குப் பெற்றிலமே. (34)

போதமிலா ரோடே பொருந்தக் கலந்துமிக
வேதமுடி யாரை விளம்புதற்குப் பெற்றிலமே. (35)

பேயான பொய்ச்சமைய பேதம் தனில்உணர்ந்து
வாயார ஆகமத்தை வாழ்த்துதற்குப் பெற்றிலமே. (36)

பொய்கண் டகலாத போதமிலோம் இந்நெடுநாள்
மெய்கண்டான் சந்தானம் மேவுதற்குப் பெற்றிலமே. (37)

பொங்கும் பவத்தொடர்ச்சி போக்குதற்கு முன்னமே
கங்கைநகர் மெய்கண்டான் காற்கமலம் பெற்றிலமே. (38)

தீரா மலமனைத்தும் தீர்ந்திருக்க இந்நெடுநாள்
சீராரு மெய்கண்டான் சேவடிகள் பெற்றிலமே. (39)

ஆர்த்த பிறப்பறுக்க அன்றே அருளுருவாய்க்
கூத்தனருள் மெய்கண்டான் கூடுதற்குப் பெற்றிலமே. (40)

ஒன்றே எனஉரைத்த ஒப்பிலருள் மெய்கண்டான்
அன்றே அருளுருவாய் ஆண்டருளப் பெற்றிலமே. (41)

8

தீதிலருள் மெய்கண்டான் செங்கமலத் தாளிரண்டும்
ஆதரவாய்ப் பூசிக்க அன்றே அறிந்திலமே. (42)

நல்லகுரு நாதன் நல்குதிரு மேனிதனைப்
புல்லறிவு தீரஅன்றே பூசிக்கப் பெற்றிலமே. (43)

பருகத் தொலையாப் பரபோகம் தன்னில்
உருகிக் கலவாமல் ஊனுவந்து விட்டனமே. (44)

தீராத பாதகங்கள் தீரக் குருபாதம்
ஓரா உணர்வென் றுணர அறிந்திலமே. (45)

எண்கொளா இன்ப எழிற்குரவர் மேனிதனைக்
கண்கள்களி கூரவன்றே கண்டிருக்கப் பெற்றிலமே. (46)

சொல்லாத சொல்லதனைச் சொல்லாலே சொன்னார்சொல்
எல்லாம் செவிகளினால் எப்பொழுதும் கேட்டிலமே. (47)

இதமகிதம் மாற்றும் எழிற்குரவர் தந்த
பதமிரண்டும் அன்றே பரிசிக்கப் பெற்றிலமே. (48)

களித்த திருஞானம் கண்ணால் அருந்த
அளித்ததனை அன்றே அருந்துதற்குப் பெற்றிலமே. (49)

ஆக்காப் பதத்தில் அருள்மணத்தை ஆதரித்து
மூக்கால் முரலுதற்கு முன்னமே பெற்றிலமே. (50)

தாயாய் அருள்சுரந்த தம்பிரான் தாள்இணையை
வாயார அன்றே வழுத்துதற்குப் பெற்றிலமே. (51)

போதநான் செய்துவந்த பொல்லா வினைதீர
நாதனார் ஏவல் நடப்பதற்குப் பெற்றிலமே. (52)

மெய்யணைய வந்தருளும் மெய்கண்டான் மேனியன்றே
கையிணைகள் கூப்பிக் கசிந்துருகப் பெற்றிலமே. (53)

நிலையாம் பொருளில் நிறுத்தும் குருவைத்
தலையால் வணங்காமல் தாழ்வுசெய்து விட்டனமே. (54)

திருச்சிற்றம்பலம்

சீகாழிச் சிற்றம்பல நாடிகள் கழிகாலத்திரங்கல் முற்றிற்று.

ஸ்ரீ மெய்கண்டதேவர் மிளிர்கழல் வெல்க.

ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் மலரடி வாழ்க.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

# திருப்புன்முறுவல்

---

திருவாவடுதுறையாதீனம்
1954

திருச்சிற்றம்பலம்

பூதமே என்றும்வரு பொறிஎன்றும் மனம்ஆதி
பொருள்என்றும் நீங்கலாதி
பொருள்என்றும் உயர்சுத்த மாயைபொரு ளென்றும்இப்
புவியிற் சிருட்டிசெய்யும்
நாதர்பொருள் என்றும்அர வணையில் துயின்றஒரு
நாரணன் பொருளதென்றும்
நாளுவி தங்குழறு வோர்குருடர் பலர்கூடி
நாடிஒளி தேடுமா போல்
பேதமுறு பிறவியில் சுழல்வதல் லால்உண்மை
பெற்றிடுவ துண்டோ?சொலாய்
பின்னுமுன் னும்பக்க மேல்கீழு மாய்அண்ட
பித்திகள் உடைத்துமண்டி
ஆதிநடு அந்தமும் இலாமல்அடி நாயேனை
அகலாமல் ஆண்டுகொண்ட
அருள்ஞான வாரியே! ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும்அரசே.

திருச்சிற்றம்பலம்

—ஸ்ரீ அகிலாண்டேசுவரி பதிகம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சீகாழிச் சிற்றம்பலநாடிகள் திருப்புன்முறுவல்

---

அந்தோ வின்னே படும்பாட்டுக் களவோ வில்லை அவைக்கீடாய்
நொந்தான் கொடிய பிறப்பிறப்பி னோவா திரங்கி எதிர்நோக்கத்
தந்தாங் கெமது திருவருடான் சாரும் பரிசால் எமைக்காண
வந்தா னேகோ வெனுங்குணியோ வானோன் திருப்புன் முறுவலே.
(1)

திரிந்தே என்பின் பணியாளாய்த் திரும்பிச் சிறிதும் பாராதே
இருந்தான் ஓய்வில் பல்லூழி யெண்ணில் நிரைய சுவர்க்கங்கள்
பரிந்தான் யோனிப் படுகடல்கள் பறிய விந்நாள் எமைக்காண
இருந்தானேகோவெனுங்குணியோவெம்மான்திருப்புன்முறுவலே.
(2)

நான்றன் னுடனா யிருக்கையினு நாடா னனன் றிலையெனத்தான்
ஊன்ற னுடனாய்க் கடலுந்தான் எனவு முழன்றான் சார்போதன்
என்றங் கிவனே டெதிராடி யிடித்திட் டிடித்திட் டெடுத்துணர்த்தத்
தான்றங்கினன்காணெனுங்குணியோதக்கோன்திருப்புன்முறுவலே
(3)

நினையா முனங்கே வலமானான் நினையப் பெறினே மாயையுடன்
தனையே சார்ந்தான்சார்வினையாற்சரித்தான்வான்மண் ணிரையமெ
தனையாங் காட்டும் படிகண்டான் தனையாம் பார்க்க மலம்போக [லாந்
எனைநோக் கினன்கா ணெனுங்குணியோ வெம்மான் திருப்புன் முறு
வலே.
(4)

கடைப்பட் டேனைப் பிறப்பிறப்பிற் கலங்கிக் குயவன் திகிரிபோல்
மிடைப்பட் டேயே னுழல்கின்றாய் வேண்டாமெய்யுண் டென்றாலும்
திடப்பட் டறியா ஞுதலின்றாற் றிகழு மருட்பா லெடுத்தேற்ற
இடைப்பட் டனன்தா னெனுங்குணியோ வெம்மான் திருப்புன்
முறுவலே. (5)

உனக்கிங் குயிர்நா மென்றாலு மோரா ரேனோன் றுரைத்தாலும்
எனக்கிங் குயிர்நீ செப்பரிசென் றெதிரான் எதிரப் பெறுங்காலை
தனக்குள் ளறிவா மெனைக்காட்டச் சார்ந்து கூட லுனையல்லால்
எனைக்கண் டிலன்கா ணெனுங்குணியோ வெம்மான் திருப்புன் முறு
வலே. (6)

சாகா விடனு மிலையிவன்றான் சாரா யோனி யிலைமாய்ந்து
வேகா விடனு மிலையிற்றை வரையு முழன்றான் வேசற்றாங்
காகா வழியாய் நாம்வலியத் தடுத்தாட் கொளலு மெனமுனிவன்
வாகா நின்றா னெனுங்குணியோ வானோன் திருப்புன் முறுவலே.(7)

அங்கங் கடுத்த வியாபியா கப்பட் டதுவா மிவனந்தோ
பொங்கு மலங்க ளுடனேகப் போந்தும் கிடந்தான் பல்லூழி
தங்கு மருளா லறிவாகிச் சார்ந்து கலந்தின் றேகோகோ
எங்கும் பாந்தா னெனுங்குணியோ வெம்மான் திருப்புன் முறுவலே.
(8)

மட்டா மலங்கட் குட்புறம்பாய் வதிந்து மலமே தாரகமாய்
ஒட்டா நின்றா னமதருளங் கூடா டிடவங் கவையெல்லாம்
விட்டா னருளே தாரகமாய் மேவிக் கொண்டா னினிமலங்கட்
கெட்டா னிவனென் றிடுங்குணியோ வெம்மான்திருப்புன்முறுவலே.
(9)

ஆறா னந்தோ தீவினைக ளந்தக் காணஞ் சுத்தியிலான்
தேறான் தேற வுரைத்தாலுஞ் செய்மா றென்கொ றிருநாமம்
கூறான் கூறு மவரிடத்துங் குறுகா னிவனு நமைக்காண
வாறா னேகோ வெனுங்குணியோ வானோன் திருப்புன் முறுவலே.
(10)

*எள்ளத் தனையு மிரக்கமிலா னிவனோ கொடிய மாபாவி*
*உள்ளத் துயர மொருக்காலு மொழியா னிவனுந் தனையாளக்*
*கொள்ளச்சொலியுந்திரிகின்றான்கொடியோன்னென்றன்முகநோக்கி*
*விள்ளப் பெரிதா யிடுங்குணியோ விண்ணோன்திருப்புன் முறுவலே.*
(11)

திருச்சிற்றம்பலம்

சீகாழிச் சிற்றம்பலநாடிகள் திருப்புன்முறுவல் முற்றிற்று.

---

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் மிளிர்கழல் வெல்க
ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் மலரடி வாழ்க.

---

திருச்சிற்றம்பலம்

கல்ஒத்த நெஞ்சராய் வாழ்வர்சிலர் புவியிற்
கறங்குசக டென்னஓடிக்
கால்ஓய்வர் சிலர்; மரப் பேய்போல நாள்தொறும்
கதறுவார் சிலர்; குவிந்த
வில்ஒத்த நுதலினர் போகத்தை நாடியே
மெலிவர் சிலர்; பசையி லாத
வெற்றென் பிணக்கடித் தலகுபுண் ணாய்க்குருதி
விழுமதைப் பருகுநாய்போல்
சொல்லற்ற உலகிலுறு துன்பெலாஞ் சுகமாய்த்
துடிப்பர் சிலர்; அவர்களோடு
துடியாத வண்ணமெனை இவ்வள வெடுத்திருள்
தொகையெலாம் நீக்கி எல்லோர(டு)
அல்லற்ற பேரின்ப வெள்ளத் தழுத்தியே
அசைவற் றிருக்கவைத்த
அருள்ஞான வாரியே! ராசைமே வியசெல்வ
அகிலாண்டம் என்னும் அரசே.

திருச்சிற்றம்பலம்

—ஸ்ரீ அகிலாண்டேசுவரி பதிகம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஆதீன வெளியீடுகள்

1. முத்திபஞ்சாக்கர மாலை—
பஞ்சாக்கர தேசிகர் மாலை—பதவுரை 2ம்பதிப்பு.
2. ஞானபூசாவிதி—பழையவுரை. ,,
3. நல்லூர் மாசிமகோற்சவ வைபவம். ,,
4. மண்ணிப்படிக்கரை ஸ்தலமகாத்மியம்.
5. காருண்யாமிர்த தீர்த்தமகிமை. ,,
6. இராமாயணதாற்பரியசங்கிரகம் உரை.
7. ஸ்ரீ மாதவச்சிவஞானசுவாமிகள்மீது தோத்திரப்பா உரையுடன் (முதற்பாகம்)
8. சிவஞானபோதம்—சூத்திரமூலமும் உரையும்.
9. சித்தாந்தமரபு—சிந்தாந்த மரபு கண்டனம்—
சித்தாந்தமரபு கண்டனகண்டனம் குறிப்புடன்.
10. ஸ்ரீ நமசிவாயமூர்த்தி மும்மணிக்கோவை.
11. திருநெல்வேலித்தேவாரப்பதிகம் உரையுடன்.
12. ஸ்ரீ மாதவச்சிவஞானசுவாமிகள்மீது
தோத்திரப்பா உரையுடன்(2-ம் பாகம)
13. சைவசமயம்.
14. பஞ்சாக்கரதேசிகர் அந்தாதி—உரையுடன்.
15. சித்தாந்தப் பிரகாசிகை—குறிப்புடன்.
15. சுதந்திரத்திருநாள்.
17. கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டுவிடுதூது
டாக்டர் ஸ்ரீமத் உ. வே. சா—உரையுடன் 3-ம் பதிப்பு.

18. திருச்செந்தூர்—கடற்கரை முருகர்கோயில் (ஆங்கிலம்)
19. ஞான சூடாமணி
20. சிவஞானபோதம்—
ஸ்ரீ மாதவச்சிவஞானசுவாமிகள் சிற்றுரை
21. ஸ்ரீ சுவாமிநாத தேசிகர் பிரபந்தத்திரட்டு
22. பூப்பிள்ளையட்டவணை முதலியன.
23. சதமணிக்கோவை பொழிப்புரை.
24. திருவள்ளுவரும் பெரியபுராணமும்.
25. சமயம்.
26. திருச்சிற்றம்பலதேசிகர் கலம்பகம் உரையுடன்.
27. அத்துவிதவாக்கியத்தெளிவுரை.
28. சிவஞானபோதம் பன்னிருசூத்திரம் உரை.
29. திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ் உரையுடன்.
30. சிவஞானசித்தியார் ஆராய்ச்சி (வேறு பதிப்பு)
31. திருப்பள்ளியெழுச்சி (வேறு பதிப்பு)
32. முத்திபஞ்சாக்கரமாலை முதலியன.
33. ஸ்ரீ மாதவச்சிவஞானசுவாமிகள் பிரபந்தங்கள் 1.
34, 35. துண்டுப்பிரசுரங்கள்.
36. திருவாவடுதுறையாதீன வரலாறு.
37. பாரததாற்பரிய சங்கிரகம் உரையுடன்.
38. உலகுடைய நாயனார் கழிநெடில் குறிப்புரை.
39. கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி (மாதவ) குறிப்புரை.
40. அம்பலவாணதேசிகர் நினைவுமலர்.
41. சந்தானசாரியபுராண சங்கிரகம்.
42. சந்தானகுரவர் நான்மணிமாலை.
43. விநாயகரகவல் உரை.
44. திருவுந்தியார் உரை. ... (மெய்கண்ட—1)
45. திருக்களிற்றுப்படியார் உரை ... (மெய்கண்ட—2)

46. கயிலைபாதிகாளத்திபாதியந்தாதியுரை.
47. நமச்சிவாயமூர்த்தி ஆற்றுப்படை உரையுடன்.
48. சைவப்பேரரசு.
49. திருவஞ்சைக்களம் தேவாரப்பதிகம் உரை.
50. திருமந்திர சிந்தனை (நவாக்கரி)
51. வடதிருமுல்லைவாயிலந்தாதியுரை (மாதவ).
52. போலிவினமறுப்பு.
53. சோமேசர் முதுமொழி வெண்பா மூலம் (மாதவ).
54. சிவஞானபோதம் பழையவுரை ... (மெய்கண்ட—3)
55, திருக்கோகர்ணம் தேவாரப்பதிகம் உரை.
56. திருஞான சாகரம்.
57. இருபாஇருபது உரை. ... (மெய்கண்ட—5)
58. துகளறுபோதம் பொழிப்புரை.
59. கந்தபுராணதத்துவம்.
60. சகலகலாவல்லிமாலை உரை.
61, திருவெம்பாவை பதவுரை—பொழிப்புரைகள்.
62. திருப்பருப்பதம் தேவாரப்பதிகம் உரை.
63. திருவெம்பாவைக்கருத்து முதலியன.
64. சிவபூசைத்திரட்டு.
65. சிவப்பிரகாசம் உரை. (மெய்கண்ட—7)
66. திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ் ஆராய்ச்சி.
67. இரட்டையர் பிரபந்தங்கள் :—
தில்லைக்கலம்பகம், திருவாமாத்தூர்க் கலம்பகம்,
ஏகாம்பரநாதருலா முதலியன.
68. அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் ... (மாதவ)
69. செம்பியன்மாதேவியார். ... (கல்வெட்டு)
70. தொட்டிக்கலை—மதுரகவி—ஸ்ரீ சுப்பிரமணியமுனிவர்
பிரபந்தங்கள் (முதற்பகுதி)

71. கவிராக்ஷஸ— ஸ்ரீ கச்சியப்பமுனிவர்
பிரபந்தங்கள். (முதற்பகுதி)
72. ஸ்ரீ காசிகண்டம் முழுவதும் மூலம்.
73. அரிகரதாரதம்மியம்
பரப்பிரம விளக்கம்.
74. சங்கற்பநிராகரணம் பழையவுரை. (மெய்கண்—14
75. திருவருட்பயன் (மெய்—8.)
வினாவெண்பா பழையவுரை (மெய்—9.)
76. திருமூலர் திருமந்திரம்.
கயிலாய சித்தர் உரை—விளக்கவுரை.
77. சிவஞானபோதம் ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள்
சிற்றுரை (மெய்—3.)
78. திருமந்திர மாநாட்டு மலர்.
79. சிவஞானபோதமும—பன்னிரு திருமுறையும்
ஆராய்ச்சிக்கட்டுரை
80. சிதம்பரம்—கண்கட்டிமடம்—
ஸ்ரீ மறைஞானசம்பந்தர் சைவச்சிறுநூல்கள் 1.
81. கவிராக்ஷஸ—கச்சியப்பமுனிவர்
பிரபந்தங்கள் (இரண்டாம் பகுதி)
82. திருவுந்தியார் தெளிவுக்கட்டுரை.
83. சுருக்க அநுட்டான விதி.
84. மெய்கண்ட சாத்திரம்— 10. போற்றிப்பஃறொடை, 11. கொடிக்கவி, 12. நெஞ்சுவிடுதூது, 13. உண்மைநெறி விளக்கம் பழையவுரையுடன்.
85. சதாசிவரூபம் பழையவுரை முதலியன.
86. சிற்றம்பலநாடிகள் கலித்துறை முதலியன.
87. உண்மைவிளக்கம் பழையவுரை (மெய்கண்—6)
முதலியன.

---